# பொதுத் தமிழ் - நான்காம் பருவம்

## இடஞ்சுட்டிப் பொருள் விளக்கம் தருக:

1. *‘கயிறுஆடு பறையின் கால்பொரக் கலங்கி’*

**இடம்:**

குறுந்தொகையில் பாலைத்திணையில் 7-வது பாடலில் இவ்வடிகள் இடம் பெற்றுள்ளன. பாடியவர் பெரும்பதுமனார் ஆவார்.

**பொருள்:**

கழைக் கூத்தர்கள் மூங்கிலின்மேல் கட்டிய கயிற்றின்மேல் ஏறி நின்று ஆடும்போது கொட்டப்படும் பறை ஒலியைப்போல மேல்காற்று வீசும்போது நிலை கலங்கி வாகை வெண்ணிற நெற்றுக்கள் ஒலி எழுப்பும்.

**விளக்கம்:**

ஆரியக் கழைக் கூத்தாடிகள் கயிற்றின்மேல் ஆடும்பொழுது கொட்டப்படும் பறைக் கொட்டுபோல், வீசும் காற்றினால் வாகை மரங்களின் விதைக் கூடுகள் நடுங்கி ஒலிக்கும் இந்த மூங்கில் நிறைந்த காட்டினை கடந்து செல்லும் கருத்தொருமித்து வரும் இவர்கள் யார்? என்பதாகும்.

2. *’கழனி மாஅத்து விளைந்துஉகு தீம்பழம்’*

**இடம்:**

இவ்வரிகள் குறுந்தொகையில் மருதத்திணை 8-வது பாடலில் இடம் பெற்றுள்ளது. பாடியவர் ஆலங்குடிவங்கனார்.

**பொருள்:**

வயல் அருகில் உள்ள மாமரத்தின் முற்றி வீழ்ந்த இனிய பழத்தை அருகில் பொய்கையிலுள்ள வாளை மீன்கள் கவ்வி உண்பதற்கு இடமாகும்.

**விளக்கம்:**

வயலில் உள்ள மாமரத்திலிருந்து விளைந்து விழும் இனிய பழத்தை பக்கத்திலுள்ள குளத்தில் உள்ள வாளை மீன்கள் கவ்வி உண்ணும். அதுபோல் தலைவனும் அனைவருக்கும் பொதுவானவன் என்று பரத்தைக் கூறுகிறாள். ஆதலால் அவன் என் வீட்டில் பெருமைப்படுத்தும் சொற்களை என் முன் கூறுவான் என்கிறாள்.

3. *’கைஇல் ஊமன் கண்ணின் காக்கும்’*
*வெண்ணெய் உணங்கல் போலப்*

**இடம்:**

இவ்வடிகள் குறுந்தொகையில் குறிஞ்சித் திணையில் 58வது பாடலில் இடம் பெற்றுள்ளது. இதனை வெள்ளி வீதியார் பாடியுள்ளார்.

**பொருள்:**

கதிரவன் காய்வதால், வெம்மையுற்ற பாறையின் ஒரு புறத்தே வைக்கப்பட்ட கை இல்லாது, கண் மட்டும் கொண்டு வாய் பேச முடியாத ஊமை ஒருவனால் காக்கப்படும் வெண்ணெய்த் திரள் போல.



சு.அருண்குமார் எம்.ஏ., எம்.பி.ஏ., பி.எட்., எம்.ஃபில்., நெட். – மரீத் ஹாஜி இஸ்மாயில் சாஹெப் கலை & அறிவியல் கல்லூரி.

விளக்கம்:

கதிரவன் காய்வதால் வெம்மையுடைய பாறையில், கை இல்லாத ஊமை ஒருவன் தன் கண்ணினால் பாதுகாக்கும் வெண்ணையைப்போல பரவியுள்ளது என்னுடைய இதே காதல் நோய். இதைப் பொறுத்துக் கொள்வது மிகவும் கடினமாகும்.

4. *“பெருந்தண் மாரிப் பேதைப் பித்திகத்து*
*அரும்பே முன்னும் மிகச்சிவந் தனவே”*

இடம்:

இவ்வடிகள் குறுந்தொகையில் பாலைத் திணையில் 94-வது பாடலில் இடம் பெற்றுள்ளது. இதனை கதக்கண்ணன் பாடியுள்ளார்.

பொருள்:

மிகுந்த குளிர்ச்சியையுடைய, மழைக்காலத்திற்குரிய, அறிவின்மையையுடைய செம்முல்லையின் அரும்புகள், தாம் சிவந்து தோன்ற வேண்டிய காலத்திற்கு முன்பே மிகச் சிவப்பாய் உள்ளன.

விளக்கம்:

மாரிக்காலத்தில் மலர வேண்டிய செம்முல்லையின் அரும்புகள், வானம் இடிந்த அளவிலேயே மலர்ந்ததுபோல, தலைவனும் அறியாமையால் இடிக்குரல் கேட்டபின், அன்பு மிகுதியால் தன்னை நினைத்து மீள்வாரோ? என்று புலம்புகிறாள் தலைவி.

கார்காலத்தின் முழக்கத்தை இருவரும் ஒருங்கு இருந்து கேட்டல் இனிது என்றும், தாம் மட்டுமே கேட்பது இன்னாது என்று கூறினாள். தலைவன் தன்னிடம் வருவதாகக் கூறித் தெரிவித்த சொல்லைக் காப்பதற்காக, வினை முடிக்காமலேயே திரும்புவானோ எனக் கலங்கினாள்.

5. *“தூஉம் துவலைத் துயர்கூர் வாடையும்”*

இடம்:

இவ்வடிகள் குறுந்தொகையில் நெய்தல் திணையில் 103-வது பாடலில் இடம் பெற்றுள்ளது. இதனை வாயிலான்தேவன் பாடியுள்ளார்.

பொருள்:

இரைதேடும் முயற்சியையுடைய நாரைகளும் தம் முயற்சியைக் கைவிட்டு நீங்கும் வண்ணம், வழுக்கும் சேற்று நிலமும், நீர்த்துளிகளை வீசும் வாடைக் காற்றும் உள்ளன.

விளக்கம்:

விரைவாக ஓடிவரும் நீரினால் குவக்கப்பட்ட கால் நடுங்குவதற்கு ஏதுவாகிய துன்பத்தைத் தருவது சேற்று நிலமாகும். அதில் நின்று, நாரை ஒன்று இரை தேடிக் கொண்டிருக்கும். அந்நாரைக்குத் துன்பம் உண்டாகும்படி தூவுகின்ற நீர்த்துளிகளைப்போல் தலைவனைப் பிரிந்து தனித்து இருக்கக் கூடிய இவ்வேளையில் வாடை, தலைவியை மேலும் துன்புறுத்துகின்றது.

இரைத்தேடும் நாரைக்கு நீர்த்துளி துன்பம் தருதல்போல் தலைவிக்கும் வாடை துன்பம் தருகின்றது என்பது உவமையால் விளக்கப்பட்டது.

6. *’நீர்இன்று அமையா உலகம் போலத்’*

இடம்:

இவ்வரிகள் நற்றிணையில் குறஞ்சித் திணையில் 1வது பாடலில் இடம் பெற்றுள்ளது. பாடியவர் கபிலர்.

**பொருள்:**

நீர் இன்றி இவ்வுலகமானது சிறக்க இயலாது.

**விளக்கம்:**

தலைவன் சொல்லிய சொல்லிலிருந்து மாறாதவர். இனிமையாகப் பழகக்கூடியவர். என் தோள்களை என்றும் பிரிதல் அறியாதவனர். தாமரைப்பூவின் குளிர்ச்சியான மகரந்தத் தாதினைத் துளைந்து எடுத்து, உயர்ந்து நிற்கும் சந்தன மரத்தின் உச்சியில் கொண்டு போய் சேர்த்து வைத்த இனிய தேனைப்போல உயர்வினை உடையது உயர்ந்தோராகிய தலைவரின் நட்பு. நீர் இன்றி இவ்வுலகமானது சிறக்கவியலாது. அதுபோல, அவர் இன்றி நாம் சிறத்தலில்லை என்பதாகும்.

7. *'மல்லல்அம் சேரி கல்லெனத் தோன்றி'*

**இடம்:**

இவ்வரிகள் புன்னை மலர்களில் வந்து தேனுகரும். அங்ஙனம் நுகர்ந்துபோது எழுந்த வண்டின் இசையைப் புலியின் ஓசையோ எனத் தேரில் பூட்டப் பெற்ற குதிரைகள் அஞ்சும்.

**பொருள்:**

வண்டுகள் புன்னை மலர்களில் வந்து தேனுகரும். அங்ஙனம் நுகர்ந்தபோது எழுந்த வண்டின் இசையைப் புலியின் ஓசையோ எனத் தேரில் பூட்டப் பெற்ற குதிரைகள் அஞ்சும்.

**விளக்கம்:**

பலமுறை இழுத்து நிறுத்தவும் நில்லாததாய் விரைவாக இயங்கும் குதிரையின் கால்கள் பந்தினைப் போலத் தாவின. இத்தகைய வளமுடைய நம் சேரியில் கல்லென்று ஓசையுடன் தோன்றி, பழிகூறும் இயல்புடைய இந்தப் பழைய ஊரில் அலரெழுமாறு கொண்கனது தேர் நில்லாது சென்றது என்பதாகும்.

8. *'புதல்வற் புல்லிப் புனிறுநா றும்மே?*

**இடம்:**

இவ்வடிகள் நற்றிணையில் 380-வது பாடலாக மருதத்திணையில் இடம் பெற்றுள்ளது. பாடியவர் கூடலூர் பல்கண்ணனார்.

**பொருள்:**

எம்முடைய தோளும் சுணங்கனிந்த மெல்லிய மார்பகத்தின் இனிய பால். பெருதலால் அந்தப் பால் சுரக்கவே புதல்வனைத் தழுவி கொண்டமையால் ஈன்றனிமையால் முடை நாற்றம் வீசுவன ஆயின.

**விளக்கம்:**

எமது ஆடை, நெய்யும் நறுமணப் புகையும் பிடித்தமையின் அழுக்குற்றது. எமது உடம்பும் மாசுபட்டது. எம்முடைய தோளும் சுணங்கனிந்த மெல்லிய மார்பகத்தின் இனிய பால் பெருகுதலால் அந்தப் பால் சுரக்கவே புதல்வனைத் தழுவி கொண்டமையால் முடை நாற்றம் வீசம். எனவே, தூய கலனணிந்த பரத்தையர்தம் சேரிக் கண்ணே தோன்றும் தேரையுடைய தலைவருக்கு மருவுதற்கு ஒத்தவர் யான் இல்லை என்று தலைவி கூறுகிறாள்.

9. *"மரம்சா மருந்தும் கொள்ளார் மாந்தர்"*

**இடம்:**

இவ்வரிகள் நற்றிணையில் 226-வது பாலைத்திணையில் இடம் பெற்றுள்ளது. பாடியவர் கணியன் பூங்குன்றனார்.

<u>பொருள்:</u>

மாந்தர், மருந்து தந்துதவும் மரத்தினின்று மருந்து எடுக்கும்போது அது பட்டுப் போகும்படி முழுவதும் எடுப்பதில்லை.

<u>விளக்கம்:</u>

மரத்திலிருந்து மருந்து எடுக்கும்போது, மரங்கெடச் செய்யார், பின்னும் மரம் பயன்பட வேண்டும். தவமும், உயிர் கெடுமாறு செய்யார் என்பது தவப்பயன் நுகருதல் வேண்டும். குடிகளை அரசர் வருத்தார் என்றது குடிகளின் பொருட்டே அரசவுரிமை என்பதுபோல் தலைவி, தலைவன்பாலுள்ள அன்பினால் உயிர் தரித்திருந்தாள். பிரிந்தால் உயிர் இறப்பாள் என்பதை அறிந்தும் பிரியக் கருதினான் தலைவன் என்பது ஒப்பு நோக்கத்தக்கது.

10. *<u>"கனியா நெஞ்சத் தானும்</u>*
*<u>இனிய அல்ல, நின் இடிநவில் குரலே"</u>*

<u>இடம்:</u>

இவ்வரிகள் நற்றிணையில் 238-வது பாடலில் முல்லைத் திணையில் இடம் பெற்றுள்ளது. இதனை கந்தரத்தனார் பாடியுள்ளார்.

<u>பொருள்:</u>

மேகமானது, மாட்சிமைப் பொருந்திய பண்புடைய தலைவனின் நெஞ்சத்தைக் கனியச் செய்யவில்லை. ஆகையால் நின்குரல் எனக்கு இனிமையைச் செய்யவில்லை.

<u>விளக்கம்:</u>

தலைவன் தான் பிரிகையில் கார்காலத்தில் வருவதாகக் வருவதாகக் குறித்தனன். கார்காலம் வந்ததும் தலைவன் வரவில்லை. எனவே, கார்ப்பருவம் செய்த மழையினைத் தலைவி கடிந்தனள். மழையின் குரல் கேட்டு அஞ்சி நடுங்கும் பாம்பு தன் பையைச் சுருக்கும். மழைக்கு அஞ்சி விஷமுடைய பாம்பின் தலை நடுங்கும் தலைவன் மட்டும் கருதவில்லை. எனவே பாம்பினும் கொடியவன் என்பது போல் கனியா நெஞ்சத்தான். ஆதலால், மேகத்தின் இடி எனக்கு இனிமையைச் செய்யவில்லை என்றாள் தலைவி.

11. *<u>"சிறுவெண் காக்கை கருங்கோட்டுப் புன்னைத் தங்கும்"</u>*

<u>இடம்:</u>

ஐங்குறுநூற்றில் சிறுவெண் காக்கைப் பத்தில் 161-வது பாடலின் இடம் பெற்றுள்ளது. இதனை அம்மூவனார் பாடியுள்ளார்.

<u>பொருள்:</u>

பெருங் கடற்கரையின்கண் வாழும் கடற் காக்கை கரிய கிளைகள் கொண்ட புன்னை மரத்தில் தங்கும்.

<u>விளக்கம்:</u>

சிறுவெண்காக்கை தனக்கு வேண்டியது முயலாது புன்னையின் கோட்டில் தங்குவது போலத் தலைவன் வரைவதற்கு வேண்டுவன செய்யாது தன்னூரில் தங்கினான் என்பதாகும்.

12. *<u>“நீத்துநீர் இருங் கழி இரைதேர்ந்து உண்டு”</u>*

**<u>இடம்:</u>**

**ஐங்குறுநூற்றில் சிறுவெண்காக்கைப்பத்தில் 2-வது பாட்டில் இவ்வரிகள் இடம்பெற்றுள்ளன. அம்மூவனார் பாடியுள்ளார்.**

**<u>பொருள்:</u>**

**பெரிய கடற்கரையில் வாழும் இயல்புடைய சிறுவெண் காக்கை ஆழமான நீரால் நிரம்பிய பெரிய கழியில் இரையைத் தேர்ந்து உண்ணும். பின் பூமணம் வீசும் சோலையில் உறைந்து விடும்.**

**<u>விளக்கம்:</u>**

**பெரிய கடற்கரையில் வாழும் இயல்புடைய சிறுவெண்காக்கை ஆழமான நீரால் நிரம்பிய பெரிய கழியில் இரையைத் தேர்ந்து உண்டபின், பூமணம் கமழும் சோலையில் உறையும். அதுபோல், தலைவன் களவுக் காலத்தில் விரைவில் வந்து உன்னை வரைந்துக் கொள்வேன் என்று வாக்குறுதி அளித்து, சூளுரைத்தான். தான் விரும்புகின்ற களவின்பம் வாய்ந்த அளவிலே அமைதி உடையவனாய்த் தன் மனைக்கண் சென்று ஆண்டு நுகரும் பிற இன்பங்களிலே நெஞ்சம் போக்கி தலைவியைப் பற்றிச் சிந்தியாமலேயே தங்கிவிடுகிறான்.**

13. *<u>“இருங்கழித் துவலை ஒலியின் துஞ்சும்”</u>*

**<u>இடம்:</u>**

**ஐங்குறுநூற்றில் சிறுவெண்காக்கைப் பத்தில் 3-வது பாடலில் இவ்வரி இடம்பெற்றுள்ளது. இதனை அம்மூவனார் எழுதியுள்ளார்.**

**<u>பொருள்:</u>**

**பெரிய கடற்கரையிலுள்ள சிறுவெண்காக்கை கரிய கழியின் நீர், துவலையாகத் தெறிப்பதனால் உண்டான ஒலியைப் பொருட்படுத்தாமல் இன்பமாக கண்ணுறங்கும்.**

**<u>விளக்கம்:</u>**

**காக்கை இருங்கழித்துவலை ஒலியிற்றுஞ்சும் என்றது காக்கை தன் மீது துவலை வீசி ஓவென இரையும் பேரொலியையும் பொருட்டாக மதியாமல் இனிதே உறங்குமாறு போலத் தலைவனும் ஊரவர் கூறும் அம்பலும் அலரும் பொருளென மதியாமல் தன் மனையில் கவலையின்றி உறைகின்றான்.**

14. *<u>“இருங்கழி மருங்கின் அயிரை ஆரும்”</u>*

**<u>இடம்:</u>**

**ஐங்குறுநூற்றில் சிறுவெண்காக்கைப் பத்தில் என்னும் 4-வது பாடலில் இடம்பெற்றுள்ளது. அம்மூவனார் பாடியுள்ளார்.**

**<u>பொருள்:</u>**

**பெருங்கடற்கரையின்கண் வாழும் சிறிதே வெண்ணிறத்தைத் தன்னுடம்பிலே கொடண்ட கடற்காக்கை, கரிய கழியிடத்தேயுள்ள சிறிய அயிரை மீனை விரும்பியுண்ணும்.**

**<u>விளக்கம்:</u>**

**சிறுவெண்காக்கை பெரிய கழியிடத்துச் சிறிய அயிரை மீனை விரும்பி உண்ணும். அதுபோல் தலைவன் புறத்தொழுக்கம் கெட்டும் தகுதிக்கொப்ப வாழாமல் பரத்தையருள்ளும் இழிதோரை நுகர்ந்து வாழ்கிறான்.**

15. *"அறுகழிச் சிறுமீன் ஆர மாந்தும்"*

இடம்:

இவ்வரி ஐங்குறுநூற்றில் சிறுவெண் காக்கைப் பத்தில் 5-வது பாடலில் இடம்பெற்றுள்ளது. அம்மூவனார் பாடியுள்ளார்.

பொருள்:

பெரிய கடற்துறையின்கண் வாழும் தன் உடலில் சிறிதே வெண்ணிறம் பொருந்திய காக்கை நீர் வற்றிய கழியின்கண் உள்ள சிறுமீன்களை வயிறு நிறைய உண்ணும்.

விளக்கம்:

சிறுவெண் காக்கை பெரிய மீனைத் தேர்ந்துண்ணாது சிறு மீனை உண்ணுவதுபோல பெரிய மதிக்கற்பாடு மிக்க தலைவன்பால் சிறுமையொழுக்கமே தங்கிற்று என்பதாகும்.

16. *"அவரை அருந்த மந்தி பகர்வர்*
*பக்கின் தோன்றும் நாடன் வேண்டின்"*

இடம்:

இவ்வரிகள் ஐங்குறுநூற்றில் குரங்குப்பத்தில் 1வது பாடலில் இடம்பெற்றுள்ளது. இதனை கபிலர் பாடியுள்ளார்.

பொருள்:

அவரைக் காய்களை வயிறார உண்ட பெண்குரங்கு, வணிகர் கையாளும் பையைப் போலப் பருத்துக் காணப்படும்.

விளக்கம்:

மந்தி அவரையை நிரம்ப உண்டு சரக்கு இட்ட பைபோலத் தோன்றும். நாடன் என்பது தலைவனுடைய பெருஞ்செல்வத்தை அதாவது ஆண்டு வாழ்வனவும் மேலும் உணவுகளில் குறைவின்றி வாழும் நாடன் என்பதாகும்.

17. *"கல்லா வன்பறழ்*
*அருவரைத் தீந்தேன் எடுப்பி அயலது"*

இடம்:

இவ்வடிகள் ஐங்குறுநூற்றில் குரக்குப் பத்தில் 2-வது பாடலில் இடம்பெற்றுள்ளது. இதனை கபிலர் இயற்றியுள்ளார்.

பொருள்:

தனது மரமேறுதல், தேன் அழித்துத் தாவுதல் முதலிய தொழில்களை இன்னும் நன்கு பயிலாத இளங்குரங்குக்குட்டி, இனிய தேனடையைத் தீண்டவே ஈக்கள் கிளர்ந்தன. அவற்றிற்கு அஞ்சிய குரங்கு அருகிலுள்ள அச்சமூட்டும் மரக்கிளைமேற் பாய்ந்தது.

விளக்கம்:

தேன்பருகும் ஆசை இருப்பினும் அதனை எடுத்துண்ணும் வழி தெரியாத மடமையுடைய குரங்குக்குட்டி ஆற்றலுடையதே ஆயினும் ஈக்களை ஒதுக்கி உண்ண அறியாது ஈக்களை எழுப்பி விட்டுப் பின்னர் அவற்றுக்கு அஞ்சிப் பின்னும் கேடு தரும் நெடிய சினைமேல் பாயும். அதுபோல் தலைவனும் இரவில் வரும் உபாயம் அறியாது, தலைவியின் குறியையும் பிழைத்து அல்ல குறிப்பிட்டு, தாய் முதலியோர்க்கு நின் (தலைவன்) வரவை அறிவித்துப் பின் அவர் ஆரவாரம் கேட்டு உருகெழு காட்டின் ஊடே தலைவன் ஓடிப்போயினன்.

18. *“ நீ செலின்,*
*நின்நயந்து உறைவி என்னினும் கலிழ்மே”*

இடம்:

இவ்வரிகள் ஐங்குறுநூற்றில் குரக்குப்பத்தில் 3-வது பாடலில் இடம்பெற்றுள்ளது. இதனை கபிலர் பாடியுள்ளார்.

பொருள்:

நீ திட்டமிட்டவாறு பிரிந்து செல்வேயானால், நின்னையே தன்னுயிர்க் காவலனாய் விரும்பி, நம்பிக்கையோடு வாழும் என் தோழி, என்னினும் மிகுதியாகக் கலங்குவாள்.

விளக்கம்:

வரைவிடை வைத்துப் பிரியும் தலைமகன் ‘நின் துணைவியை உடம்படுவித்தேன். இனி நீயே இதற்கு உடம்படாது கலிழ்கின்றாய்’ என்பதற்கு தோழி கூறிய வரிகள் இவை. காட்டில் தழைத்திருக்கும் செயலை மரத்தின் தளிர்கள் பவளம்போல் சிவப்பு நிறத்தில் இருக்கும். அந்த தளிர்களைப் பெண்குரங்கும், அதன் குட்டியும் உண்ணும், நீ இவளை விட்டுவிட்டுப் பொருள் தேடச் சென்றால் உன்னை விரும்பி வாழும் என் தலைவி நான் அழுவதைக் காட்டிலும் பெரிதும் அழுவாள். ஆதலால் வன்பறழ் தளிர் முற்றி நிறம் மாறுமுன்பே உண்டாற்போல், நீயும் இவள் பருவத்தே மணந்து வாழ வேண்டும் என்பதாகும்.

19. *“ஓண்கேழ் வயப்புலி குழுமலின், விரைந்து உடன்,*
*குன்றுஉயர் அடுக்கம் கொள்ளும் நாடன்”*

இடம்:

இவ்வரிகள் ஐங்குறுநூற்றில் குரக்குப்பத்தில் 4-வது பாடலில் இடம்பெற்றுள்ளது. இதனை கபிலர் இயற்றியுள்ளார்.

பொருள்:

வலிமை சான்ற புலி முழங்குவதலைக் கேட்டு அச்சமுற்று விரைந்து உயர்ந்த மலைச்சிகரத்தில் ஏறிக்கொண்டு தப்பிச் செல்லுதற்கு இடனான மலைநாடன்.

விளக்கம்:

மந்திக் கணவனான ஆண்குரங்கு புலி உறுமல் சத்தம் கேட்டு அஞ்சிக் குன்றுயர் அடுக்கம் கொள்ளும். அதுபோல் வேற்று விரைவு வரும் என தலைவி படைத்து மொழிந்தமை கேட்டு அஞ்சி தலைவன் சென்றான்.

20. *“சூரல்அம் சிறுகோல் கொண்டு, வியல்அறை மாரி மொக்குள் புடைக்கும் நாட!”*

இடம்:

இவ்வடிகள் ஐங்குறுநூற்றில் குரக்குப் பத்தில் 5-வது பாடலில் இடம்பெற்றுள்ளது. இதனைக் கபிலர் இயற்றியுள்ளார்.

பொருள்:

குரங்கின் தலைவனாகிய நிறம் விளங்குகின்ற மயிரையுடைய கடுவன், சிறிய பிரம்பங்கோலைக் கைக்கொண்டு அகன்ற பாறையில் மழையாலுண்டான மொக்குகளை அடிக்கின்ற நாட்டுக்குரிய தலைவன்.

விளக்கம்:

தாமே நொடிப் பொழுதில் அழிந்தொழியும் மொக்குகளைக் குரங்கு கோல் கொண்டு புடைத்து நனிய விரைவில் அழித்தாற் போன்று நீ எம்மை நயவாமையால் வரையாது

ஒழுகும் ஒழுக்கமே யாங்கள் மாரி மொக்குகள் போன்று நின்றாங்கு நின்று அழிந்தொழிய போதியதாகவும், களவொழுக்கத்தானும் நீ இடையீடு செய்து எம்மைக் கொல்கின்றனை என்பதாகும்.

21. *<u>'வருநர்க்கு வரையா வசைஇல் வாழ்க்கை'</u>*

<u>இடம்:</u>

இவ்வரி புறநானூற்றில் 10-வது பாடலில் இடம் பெற்றுள்ளது. இதனை சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னியை ஊன்பொதி பசுங்குடையார பாடியது.

<u>பொருள்:</u>

அமிழ்தத்தைச் சுவையால் வென்று உண்ண உண்ண அடங்காத, மணம் நிறைந்த தாளிப்பனையுடைய உணவினை வரும் விருந்தினர்க்கு அளவிறந்து அளித்து மகிழும் குற்றமற்ற வாழ்க்கையையுடையவர் குல மகளிர்.

<u>விளக்கம்:</u>

அமிழ்தம் போலச் சமைத்து, வந்தவர்க்கெல்லாம் வழங்கும் குற்றமற்ற வாழ்க்கையை உடையவர்கள் மகளிர். அவர்கள் தழுவுதல் அன்றி போரிடும் மள்ளர் தழுவ முடியாத கல் போன்ற மார்பினை உடையவன் நீ! நற்செயல்களை புரிபவன் நீ! அதனால் உன் புகழ் விளங்குகிறது என்று சென்னியைப் புகழப்பட்டுள்ளது.

22. *<u>'நீர்இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்'</u>*

<u>இடம்:</u>

இவ்வரி புறநானூற்றில் 18-வது பாடலில் இடம் பெற்றுள்ளது. இதனை குடபுலவியனார் பாடியுள்ளார்.

<u>பொருள்:</u>

நீரின்றி அமையாத உடல், உணவால் அமைவதாகும்.

<u>விளக்கம்:</u>

உடல் உயிர் வளர்க்க உணவைக் கொள்ளும். எனவே உயிராக உணவைக் கூறினார். உடல் உணவால் அமைவது எனும் கருத்தில் உணவின் பண்டம் என்று கூறப்பெற்றது. நீரும் நிலனும் முறையே உடலும் உயிரும் போன்றது. எனவே இவ்விரண்டும் படைத்தோர் அறம் முதலிய மூன்றும் படைத்தோர்.

23. *<u>'எத்திசைச் செலினும், அத்திசைச் சோறே'</u>*

<u>இடம்:</u>

இவ்வரி புறநானூற்றில் 206-வது பாடலில் இடம் பெற்றுள்ளது. இதனை ஔவையார் பாடியுள்ளார்.

<u>பொருள்:</u>

எந்தத் திசைக்கண் சென்றாலும் அத்திசையில் சோறு கிடைக்கும்.

<u>விளக்கம்:</u>

மரத்தை வெட்டிக் கொள்ளும் தச்சர் பெற்ற சிறுவர்கள் தம் மழுவோடு காட்டிற்குச் சென்றால் அங்குள்ள மரங்கள் எப்படி அவர்களுக்கு உடனே வேண்டுமாறு பயன்படுமோ அப்படி எந்தச் திசைக்கண் சென்றாலும் அத்திசையில் சோறு கிடைக்கும். காட்டகத்து மரத்துக்குக் குறைவில்லை என்பதுபோல வையகத்தில் புரவலரும் பலர் அவர்க்குக் குறைவில்லை என்றார். பரிசில் நீட்டித்தல் தவறு என்பது ஆயிற்று.

24. *“பைதல் சுற்றத்துப் பசிப்பகை ஆகிக்,*
*கோழி யோனே, கோப்பெருஞ் சோழன்”*

**இடம்:**

**இவ்வரிகள் புறநானூற்றில் 212-வது பாடலில் இடம் பெற்றுள்ளது. இதனை கோப்பெருஞ்சோழனைப் பிசிராந்தையார் பாடியுள்ளார்.**

**பொருள்:**

**நாட்டில் பாணரின் வருத்தமுற்ற சுற்றத்தின் பசிக்குப் பகையாய் உறையூர் என்னும் ஊரில் கோப்பெருஞ்சோழன் படைவீட்டில் இருந்தான்.**

**விளக்கம்:**

**உன்னுடைய அரசன் யாரென கேட்டதற்கு அவன் கோப்பெருஞ்சோழன், பசிப்பகைஞன், பொத்தியின் நண்பன் என்றார். பொத்தியாரோடு நட்பு பூண்டமையின் நாள்தோறும் மகிழ்நகை பூண்டான். அவன் வாழும் ஊரும், அவனும், பசிதீர்க்கும் பண்பு பெற்றமை எனக் கூறினார்.**

25. *“மண்டுஅமர்க்கு உடைந்தனன் ஆயின், உண்டஎன்*
*முலைஅறுத்திடுவென்”*

**இடம்:**

**இவ்வடிகள் புறநானூற்றில் 278-வது பாடலில் இடம் பெற்றுள்ளது. இதனை காக்கை பாடினியார் நச்செள்ளையார் பாடியது.**

**பொருள்:**

**நெருங்கிச் செய்யும் போரில் அஞ்சி இறந்தான் என்பது உண்மையாயின் அவன் பாலுண்ட என் மார்பகத்தை அறுத்தெறிவேன் என்று சினம் கொண்டு வாளைக் கையிலேந்திப் போர்க்களம் புகுந்தாள் முதிய தாயொருத்தி.**

**விளக்கம்:**

**நரம்புகள் வெளியே தெரியும்படி சதை நிரம்பாத உலர்ந்த மெல்லிய தோள்கள் கொண்ட, தாமரை இலை போன்ற அடிவயிற்றினையுடைய முதிய தாய், தன் மகன் போருக்கு அஞ்சிப் புறமுதுகிட்டான் என்று பலர் கூறக்கேட்டு நெருக்கிப் போரிடும் போர்க்களத்தில் என் மகன் தோற்று ஓடினான் என்றால் அவன் பால் உண்ட என் முலைகளை அறுத்தெறிவேன் என்று கோபம் கொண்டு கையில் வாளோடு போர்க்களம் நோக்கிச் சென்றாள்.**

26. *‘வாய்ப்பு அறியலனே வெயில்துகள் அனைத்தும்’*

**இடம்:**

**இவ்வரி பதிற்றுப்பத்தில் இரண்டாம் பத்தில் பாடல் 20-இல் இடம் பெற்றுள்ளது. இதனை குமட்டூர் கண்ணனார் பாடியுள்ளார்.**

**பொருள்:**

**சிற்றிடுக்கின் வழியே நுழையும் ஞாயிற்றின் கதிரில் தோன்றும் நுண்துகள் மிக்க சிறுமைக்கு நிகராகும்.**

விளக்கம்:

பகைவர் நாட்டின்கண் படையெடுத்துக் சென்று செய்த போரில் புறமுதுகிடுதல், மிகச் சிறிதும் பின் வாங்குதலறியாதவன் என்பதற்கு வெயில்துகளை வேனும் என்று ஒப்புமை கூறப்பட்டது.

27. *"மாசி நின்ற மாகூர் திங்கள்"*

இடம்:

இவ்வடி பதிற்றுப்பத்தில் ஆறாம் பத்தில் 59-வது பாடலில் இடம்பெற்றுள்ளது. இதனை காக்கைப் பாடினியார், நச்செள்ளையார் ஆடுகோட்பாட் சேரலாதனைப் பாடியது.

பொருள்:

மாசி மாதத்திலே பெய்யும் பெரும்பனியில் குளிர் தன்மையைப் பெற்று மக்கள் உடல் வளைந்து நடுங்குவர்.

விளக்கம்:

பகற்பொழுது அதிகம் ஆகாமல் இரவுப்பொழுது மிக்கு விளங்குகின்ற மாசித்தன்மை நிலைபெற்ற, மக்களெல்லாம் குளிரால் நடுங்கி பனி பெய்யும் மாசி மாதத்திலே கீழ்த்திசையிலே சூரியன் தோன்றி உலக மக்களின் துயரத்தைக் களைவதுபோல இரத்தலையுடைய பரிசிலின் சிறிய குடும்பங்கள் வளர்ச்சியடையும்படி வறுமையைக் களைபவன் என்று உணர்த்தப்பட்டது.

28. *"வீழநர்க்கு இறைச்சியாய் விரல்கவர்பு இசைக்கும்கோல்"*

இடம்:

இவ்வரி கலித்தொகையிலுள்ள பாலைக்கலியில் இடம் பெற்றுள்ளது. இதனை எழுதியவர் பாலை பாடிய பெருங்கடுங்கோ.

பொருள்:

விரும்புவர்க்கு நேயமாக விரலாலே மீட்டி ஒலிக்கும் நரம்பு ஏழும் பயன் இல்லாமல் போகும்படி தானக் கோலின் அகப்பட்டு, இடை நின்று அற்றுப் போகும்.

விளக்கம்:

யாழில் ஏழு நரம்புகள் இருக்கும். அவற்றில் நடுவில் இருக்கும் நரம்பு முதன்மையானது. யாழிசையை விரும்புபவர்க்கும் கருவாக அமைத்து இசை கூட்டித் தரும் நரம்பு அது. மீட்டும்போது அதே நடுநரம்பு அறுந்து பிற நரம்புகளைப் பயனில்லாமல் செய்வதுபோல தலைவி அறுந்துபோக விட்டுவிட்டுப் பொருள் தேட விரும்புவார்களா? என்று தோழி கூறுகிறாள்.

29. *"தையில்நீ ராடிய தவம்தலைப் படுவாயே"*

இடம்:

இவ்வரி கலித்தொகையிலுள்ள குறிஞ்சிக்கலியில் இடம் பெற்றுள்ளது. இதனைக் கபிலர் பாடியுள்ளார்.

பொருள்:

மகளிர் சூழ, வகை வகையாக அணிபுனைந்து பொலிவு பெற்று நீ தைத் திங்களில் நீராடிய தவத்தின் பயன் எல்லாம் பெறுவையோ? என்பதாகும்.

விளக்கம்:

தலைவன் தலைவியை நோக்கி, மருள் கொண்டு மருண்டு நான் பார்க்கும்படி இவனுக்கு என்ன நேர்ந்துவிட்டது? இவளுக்கோ அருள் இல்லை என்று அயலார் பழிக்கின்றனர். பழித்துப் பல்லைக் காட்டிச் சிரிக்கும் பெண்களுக்கு நடுவில் பூண்டிருக்கும் அணிகலன்களுடன் தையல் நீராடும் மகளிர்போல் தவக்கோலம் கொள்வாயோ? கொண்டாலும் பயன் அடையாய் என்று தலைவன் கூறுகிறான்.

30. *“வேனில் புனல்அன்ன”*

இடம்:

இவ்வரி கலித்தொகையில் மருதக்கலியில் இடம் பெற்றுள்ளது. மருதன் இளநாகனார் எழுதியுள்ளார்.

பொருள்:

வேனிற் காலத்தே வருகின்ற புதுப்புனலை வேண்டியார் வேண்டியாங்கு உண்டர்.

விளக்கம்:

வேனிற் காலத்தே நீரை, வேண்டியார் வேண்டியாங்கு உண்பர்; தலைவனை விரும்பிய பரத்தை மகளிர் எல்லாம் வேண்டியபொழுது, ஆர்வத்தோடு அணைந்து ஆடுதற்கு இயைந்து ஒழுகுபவன் என்று தலைவனின் பரத்தமை தன்மையை நுணுக்கமாக உரைக்கப்பட்டது.

31. *“வெருவுற உய்த்தவன் நெஞ்சல்போல்”*

இடம்:

இவ்வரி கலித்தொகையில் நெய்தற்கலியில் இடம் பெற்றுள்ளது. இதனை எழுதியவர் நல்லந்துவனார்.

பொருள்:

மக்கள் கண்டு அஞ்சுமாறு செயல்களைச் செய்பவன். அவனது நெஞ்சின் மருட்சிபோல உலகில் மெல்ல மெல்ல இருள் வந்து நிறைந்தது.

விளக்கம்:

அருளையே கண்ணால் காட்டாதவனும் அறத்தை எண்ணிப் பார்க்காதவனும் நன்மை எதுவும் செய்யாதவனும் ஆகிய அரசன் ஒருவன் மக்களுக்கு அச்சத்தை உண்டாக்கி நாட்டை ஆண்டவன் நெஞ்சம்போல இருள் சூழ்ந்து வரும் மாலைக்காலம்.

32. *“வெந்தோர் புண்ணின்கண் வேல் கொண்டு நுழைப்பான்போல்”*

இடம்:

இவ்வரிகள் கலித்தொகையில் நெய்தற்கலியில் இடம் பெற்றுள்ளன. இதனை நல்லந்துவனார் எழுதியுள்ளார்.

பொருள்:

துன்பத்திலே அழுந்தியிருக்கின்ற ஒருவரை மேலும் துன்பப்படுத்தி இன்னலை உருவாக்குதல்.

விளக்கம்:

மாலைக்காலமே! என் உள்ளத்தை வாங்கிக் கொண்டு சென்றவர் எனக்குத் துணை தராத காலத்தில் வெள்ளை மான் கூட்டத்தில் ஒரு மானின் நெஞ்சத்தை நோக்கி அம்பு

தொடுக்கும் கொடியவன்போல துன்பம் பட்டுக் கொண்டிருப்பவரை மேலும் துன்பப்படுத்த மாலைக்காலம் வந்துவிட்டது என்பதாகும்.

33. <u>குறுந்தொகையில் கண்டோர் இரங்கிக் கூறியது யாது? (பாலை: பெரும்பதுமனார்)</u>

- தலைவனும் தலைவியும் உடன்போக்கில் தம்மில் நீங்கியவராகச் செல்லுகின்றபொழுது, அவர்களைப் பாலை நிலத்து வழியிடையிலே கண்டவர்கள் இரங்கிச் செவிலித்தாயிடம் கூறியது.
- தாயே! ஆரிய நாட்டில் வாழும் கழைக் கூத்தர்கள் மூங்கில் கால்களை நட்டு அதன் மேல் கயிறுகட்டி கயிற்றின்மேல் நின்று ஆடும் போது ஒலிக்கின்ற பறையின் ஓசை போல, மேல் காற்று வீசும் போது நிலை கலங்கி வாகை மரத்தின் காய்களின் வெண்மையான விதைகள் ஒலித்துக் கொண்டிருக்கின்ற பாலை நிலத்தில் நடப்பதற்கு இடையூறாக முள்ளுடைய மூங்கில் புதர்கள் மண்டிக் கிடக்கும்.
- வேனில் வெம்மையால், கடுமையான காற்று வீசுவதால் உருகித் தீப்பிடிக்கின்ற அந்த பாலை நிலத்தில் செல்ல நினைத்த இவர்கள் யார்? என்ன உறவினரோ?
- வில்லை வைத்திருக்கும் தலைவனின் கால்களில் கழல்கள் இருந்தன. வளையல் அணிந்த தலைவியின் கால்களில் சலங்கை அணிந்திருந்தன. கழல்களில் இருந்து வரும் ஓசையும் சலங்கையில் இருந்து ஒலிக்கும் ஓசையும் ஒலித்துக் கொண்டிருந்தது.
- மூங்கில் புதர்கள் நிறைந்த பாலை நிலத்தில் இருவரும் கருத்தொருமித்துச் செல்கின்றனர். கழல்களின் ஓசையும், சலங்கையின் ஓசையும் கேட்காதவாறு வாகை மரத்தின் காய்களின் விதைகள் ஒலிக்கின்ற பாலை நிலத்தில் செல்கின்ற இந்த நல்லோர் நினக்கு என்ன உறவினரோ?
- இருவரும் மணம்புரிந்து இல்லறம் நடத்துவதற்கு எவரும் தடையாக இருக்க வேண்டாம் என்றனர்.

34. <u>தலைவி இகழ்ந்ததை அறிந்த பரத்தை தலைவியின் தோழியர் கேட்கும்படி கூறியது யாது?</u>

- தலைவி தன்னை இகழ்ந்து கூறினாள் எனக் கேட்ட காதற் பரத்தை, தலைவியின் தோழியர் அறியும்படி தலைவனைப் பழித்து சினந்து கூறியது.
- வயல் அருகில் உள்ள மாமரத்தின் முற்றிவீழ்ந்த இனிய பழத்தைப் பக்கத்துப் பொய்கையிலுள்ள வாளை மீன்கள் கவ்வி உண்பதற்கு இடனாகிய மருத நிலத் தலைமகன்,

  "கழனி மாஅத்து விளைந்துஉகு தீம்பழம்
  பழன வாளை கதூஉம் ஊரன்"
- மாமரம், தன்னை வைத்துப் போற்றுவார்க்குப் பயன்படாமல் ஒரு முயற்சியும் செய்யாத அருகில் உள்ள வயலில் துள்ளித் திரியும் வாளை மீனுக்கு வருந்தாமல் எளிதில் பயன் துய்க்கப் பயன்படுவதாயிற்று.
- தலைவனும் தன்னைப் பேணும் தலைவிக்குப் பயனின்றிப் பரத்தைக்கு எளிதில் பயன் நுகர ஏதுவாயினான்.
- தலைவன், காதற்பரத்தையின் இல்லத்தில் அவளைப் பெருமைப்படுத்தும் புகழ் மொழிகளைக் கூறினான். அவன் எத்துணைப் பெருமொழிகள் கூறிய போதிலும் பரத்தையர் மனை, தலைவனின் மனை ஆவதில்லை எம் இல் என்றாள்.
- மனையறம் பூண்டு ஒழுகற்பாலளாகிய தலைவி தன் மகனுடன் உறையும் இல்லம் தலைவனுடைய இல்லம். ஆதலின் தம் இல் எனப்பட்டது.

* **எம்முடைய வீட்டில், எம்மை வசப்படுத்துவதற்காகப் பெருமொழிகளைக் கூறிச் சென்று, தம்முடைய வீட்டில், கண்ணாடி முன் நிற்பவர் கையையும், காலையும் தூக்கும்போது, தானும் தூக்குகின்ற கண்ணாடியுள் தோன்றும் பாவையைப்போல தலைவியிட்ட தொழில்களையெல்லாம் உணர்ச்சியின்றிச் செய்கிறான். (மருதம்: ஆலங்குடி வங்கனார்).**

35. **குறிஞ்சித் திணையில் தன்னை இடித்துக் கூறிய தோழனை நோக்கி - தலைவன் கூறியவற்றைத் தொகுக்க. (பாடியவர்: வெள்ளிவீதியார்)**

* **தான் கொண்ட காதலுறவைப் பொருந்தாதென இடித்துக் கூறிய, தன் தோழனுக்குத் தலைவன் தன் நோயது தன்மையை கூறுகின்றான்.**
* **என்னை இடிந்துரைக்கும் கேண்மையினை உடையவர்களே! நுமக்கு இன்றியமையாத காரியமாக, என்னுடம்பு யானுற்ற நோயால் உருகி அழிவதற்கு முன்பாக, அதன் அழிவைத் தடுத்து நிறுத்துதற்கான செய்தலாயின் அது நன்மை தருவதாக இருக்கும். வேறு எவையும் நன்மைதருவன ஆகா.**
* **சூரியன் காயும் வெப்பம் மிகுந்த வெம்மையுடைய பாறையில் கைகள் இல்லாத ஊமை ஒருவன் தன் கண்ணினால் பாதுகாக்கும் வெண்ணெயைப்போல பரவியுள்ளது என்னுடைய இந்தக் காதல் நோய்.**
* **இக்காமநோய் பரந்திருக்கின்ற என் உடலிலுள்ள உயிரினை அழிக்கவல்லது, இனியும் பொறுத்துக் கொள்வது எனக்கு கடினமாகும்.**

36. **கார்ப் பருவம் கண்டு தலைவி கூறியன யாவை?**

* **தலைமகன் மீள்வதாகக் குறித்துச் சென்ற கார்ப்பருவத்தின் வரவினைக் கண்ட தலைவி, குறித்தபடி அவன் வராததால் மிகவும் வருந்தினாள்.**
* **அவளது வருத்தம் தோழிக்குக் கவலையைத் தருகின்றது. அந்தக் கவலையை மாற்றுவாளாகத் தான் பொறுத்திருக்கும் துணிவுடையவள் எனத் தலைவி கூறுகின்றாள்.**
* **தோழி! மிக்க குளிர்ச்சியுடைய மழைக் காலத்தில் பூக்கவேண்டிய பிச்சிப் பூவின் அரும்புகள் அறியாமையால் முன்னதாகவே சிவந்து விரிந்துள்ளன. அவற்றைக் கண்டு இது கார்ப்பருவமென்று நானா மயங்குவேன்? மயங்கேன்!**
* **அருவியானது பெரிய மலையிலே தங்கி வீழும்படியாகத் தொகுதியாகிய பெரிய மேகங்கள் முழங்கும் ஓசையினை, நள்ளிரவிலும் என்னைப் பிரிந்து துயரத்தால் இன்னும் தனிமை கொண்டு வருந்தியிருக்கும் தலைவர் கேட்டாராயின், மீண்டும் என்ன நிலைமையை அடைவாரோ? தம் வினை முடிவதற்கு முன்பேயே மீளுதற்கு முற்படுவாரோ என்று மயங்குவேன்!**

37. **தலைவனின் நட்பு எத்தகையது? நற்றினை வழி விளக்குக.**

**தலைவனின் தன்மைகள்:**

* **தலைவன் சொல்லிய சொல்லிலிருந்து மாறுபடாதவர். இனிமையாகப் பழகும் தன்மையுடையவர்.**
* **என் தோள்களை என்றும் பிரிதல் அறியாதவர். மேலும், வண்டு, தாமரைப் பூவின் குளிர்ச்சியான மகரந்தத் தாதினைத் துளைத்து எடுத்து, உயர்ந்து நிற்கும் சந்தன மரத்தின் உச்சியில் கொண்டு போய் சேர்த்து வைத்த இனிய தேனைப்போல - உயர்வினை உடையது உயர்ந்தோராகிய தலைவரின் நட்பு.**

- நீர் இன்றி இவ்வுலகமானது சிறக்கவியலாது. அதுபோல, தலைவர் இன்றி நாம் சிறத்தலில்லை.
- அவரும் நம்மீது கொண்ட விருப்பத்தின் காரணமாக கருணையோடு நடப்பர். மேலும் அவர் பிரிதல் என்ற சிறுமையான செயலைச் செய்ய அறியாதவர் ஆவார்.

38. <u>பிரிவிடை மெலிந்த தலைமகள் வன்பொறையாக மொழிந்தவற்றைத் தொகுக்க.</u>

- நல்ல நெற்றியையுடையவளே! மாந்தர், மருந்து தந்துதவும் மரத்தினின்று மருந்து எடுக்கும்போது, அது பட்டுப்போகும்படி முழுவதும் கொள்ளார்.
- தவம் செய்யும் மாந்தர் தம் வலிமை முற்றும் கெடுமளவு உயர்ந்த தவம் புரியார். மன்னரும் தன் கீழே வாழும் குடிமக்களின் வளமையெல்லாம் நீங்குமாறு அவரிடம் வரிவாங்குபவர் அல்லர்.
- இவற்றையெல்லாம் தலைவர் உணர்வார். ஆயினும் தாமே வருத்தம் கொள்ளுமாறு வெயில் நிலைபெற்ற நீண்ட பாலை வழியில் எம்மைத் தனித்து விட்டுப் பிரிந்து அகன்றனர்.
- நாம் அவரைப் பிரியாதிருப்பின் உயிருடன் வாழ்வோம். பொருள் காரணமாகப் பிரியின் இறந்து படுவோம் என்பதைத் திண்ணமாக அறிந்தவராகார்.
- சான்றோர், ஆடவரின் இயல்பு இஃதே என்பர். இதனை உலகத்தினர் யாவரும் அறிவர் என்று தலைவி, தோழியிடம் பிரிவின் துயரத்தால் வருந்திக் கூறுகிறாள்.

39. <u>'நின்குரல் இனிமையைச் செய்யவில்லை' என்று தலைவி கூறியது ஏன்?</u>

- தலைவன் தான் பிரிகையில் கார்காலத்தில் வருவதாகக் குறித்தனள். கார்காலம் வந்ததும் தலைவன் வரவில்லை.
- எனவே, கார்ப்பருவம் செய்த மழையினைக் கடிந்தனள். மழையானது, தலைவனை அழைத்து வரும் என்று தலைவி எண்ணினாள்.
- மழைமேகம், 'அவர் நிலை அறிவாயோ' என்பது போல் தனிந்து வந்து மழை பெய்து தலைவி துயரை மிகுவித்தது.
- பிறர் நோயும் தன் நோய்போல் போற்றி அறனறிதல் சான்றோர்கட்கெல்லாம் கடனாகும். ஆனால் தன் நோயை நீக்கும் தன்மையை உணராது இங்ஙனம் வினவுவதால் சான்றோர் செய்கையை ஒவ்வாது என்றாள்.
- ஏ! மேகமே ஒரு சேர மயங்க மோதி ஒலிக்கும் நின்னுடைய குரல் வலிய இடியேறாய் முழங்குக.
- அவ்வொலி, எங்கும் பரவி, பாம்புகள் தம் படம் குன்றுவது வலியடங்கச் செய்யும். அங்ஙனம் செய்வதேயன்றி, மாட்சிமைப் பண்புடைய தலைவரின் நெஞ்சத்தைக் கனியச் செய்வதில்லை.
- ஆகையால் நின்குரல் எனக்கு இனிமையைச் செய்யவில்லை என்று தலைவி கூறினாள்.

40. <u>வரைவிடை மெலிந்து தலைவி கூறியது யாது?</u>

- வண்டின் உருவையும் ஒலியையும் உணர்ந்த குதிரைகள் புலியென அஞ்சித் தடுக்கவும் நில்லாது பாய்ந்து சென்றன.
- அக்குதிரைகளைப் பூட்டிய தேரும் நில்லாதாயிற்று. ஆனால் தலைவன் வந்து சென்றதால் உண்டான அலர் நோக்கிய இத்தகைய இடைப்பட்டு படாமல் இன்பம் துய்க்கக் கருதி மணம்புரிய உளங்கொண்டனன்,

- அத்தகைய எண்ணமுடையவர் இன்னும் விரைவாக வரவில்லையே என்று உள்ளம் வருந்தினாள்.

41. <u>பாணற்கு, தோழி வாயில் மறுத்தது எங்ஙனம்?</u>
- எம் உடையும் மேனியும் புதல்வரைப் பேணும் செயல்களால் மாசுற்றன. எனவே தலைவன் எம்மை முயங்குதற்கில்லை என்பாள்.
- மேலும் தலைவன் விரும்பியுரையும் பரத்தையர் சேரிக்கே செல்க எனக் கூறினாள்.
- பரத்தையர் உடம்பால் தூயராதலையும் மனத்தால் அழுக்குடையாராதலையும் சுட்டி எள்ளும் வகையான் 'வாலிழை மகளிர்' என்றாள்.
- அவர்தம் இழைகள் தூயனவே அன்றி அவர் எம்போல் தூயரல்லர் எனக் குறித்தாள். குதிரைகள் தேரிலே பூட்டப் பெற்று நீடு நிற்றலை வெறுத்தன என்றமையின் அவற்றிற்குப் பழகிய இடமான பரத்தையர்தம் சேரிக்குக் கொண்டு செல்க என்றாள்.
- பாணற் இசை எழுப்பிப் பாடுதல் வல்லாயாயினும் அதனைக் கேட்கும் மனநிலையில் யாம் இல்லை, ஆகவே இவ்விடம் விட்டு எழுக என்றாள்.

42. <u>குரக்குப் பத்தில் தலைமகன் வரைவு வேண்டிவிடத் தமர் மறுத்துழிச் செவிலிக்குத் தோழி அறத்தொடு நிற்றலை விளக்குக?</u>
- குரக்குப் பத்தில் குறிஞ்சிநிலக் கருப்பொருளான குரங்கு பற்றிய செய்திகள் அமைந்துள்ளன.
- அவரைக் காய்கள் வயிறு நிறையத் தின்ற பெண்குரங்கின் வயிறு பெரிதாகி, பண்டங்களை விலைகூறி விற்கும் வணிகரின் பையைப் போல பருத்துக் காணப்படும்.
- இத்தகைய சிறப்புமிக்க பெருஞ்செல்வத்தை உடைய நாட்டிற்கு தலைவன், விரும்பினானெனில் பசுப்போல குடியையும், கொண்டானைத் தெய்வமாகக் கொண்டொழுகும் பண்பாட்டையும் உடைய பெண்ணைக் கொடுக்க பலர் முன்வருவர்.
- தலைவன் தலைவியின் மேல் கொண்ட காதலாலும், முற்பிறப்புக்கள் பலவற்றிலும் தலைவியுடனான காதல் இருந்தமையாலும், இப்பிறப்பிலும் அவர்களை ஒன்று சேர்த்தது.
- ஊழால் சேர்ந்தவரை நும் அறியாமையால் பிரிக்கப்பார்க்கிறீர். ஆதலால் தலைவன் தலைவியிடம் அருளைப் பொழிகின்றான் என்று தோழி தம் அறிவுக் கூர்மையால் தலைவனையும் தலைவியையும் ஒன்றுசேர்க்க முற்படுகிறாள்.

43. <u>குரக்குப் பத்தில் குறியின் நிகழ்வுகளை விளக்குக</u>.
- தோழி! கரிய விரல்களைக் கொண்ட பெண்குரங்கு தன் உணவு தேடுதல் குறித்த அறிவு வராமல் குட்டியுடன் ஏறுவதற்கு அரிதான மலையின் உச்சியிலுள்ள இனிய தேனைக் குடிக்க எண்ணித் தேன் கூட்டைக் கலைக்கும்.
- தேனீக்களை எழுப்பி விட்டுப் பின்னர் அவற்றுக்கு அஞ்சி அச்சம் தரக்கூடிய மரக்கிளையில் பாயும்.
- அப்படிப்பட்ட செழிப்புற்ற நாட்டுத் தலைவன் இரவில் வர மாட்டான். அந்த நிலையிலும் அவனது தாய் அவன் வருவான் வருவான் எனக் கூறிக் கொண்டிருக்கிறாள்.

44. <u>ஐங்குறுநூற்றில் குறிஞ்சித் திணையில் வரைவிடை வைத்துப் பிரிய ஆற்றுவிக்கும் தோழிக்குத் தலைமகள் சொல்லியது யாது?</u>

- தோழியே! நீ வாழ்க! மந்தியின் கணவனான அறியாமையுடைய ஆண்குரங்கு, ஒள்ளிய நிறம் படைத்த வலிமை சான்ற புலி முழங்குவதால், அச்சம் கொண்டு மிக விரைவாக உயர்ந்த மலைப்பக்கத்திற்குத் தப்பிச் செல்லும்.
- அத்தகைய தன்மையுடைய மலைநாடன் என்னை விட்டுப் பிரிந்தான். எனது மென்மையான தோளின் அழகையும் உறக்கத்தையும் கூடவே கொண்டு சென்றான்.

45. <u>வரைதல் வேண்டும் என்று தோழி தலைவனுக்குக் கூறிய மொழிகள் யாவை?</u>

- மென்மையான தலையைக் கொண்ட மந்தியின் வலிய குட்டி வருகின்ற வழியில் அசோக மரத்தின் பவழம் போன்ற ஒளிமிக்க தளிர்களை விரும்பி தின்னும் தன்மையுடைய மலைநாட்டுத் தலைவனே!
- நீ இவளை விட்டுவிட்டுப் பொருள் தேடச் சென்றால் உன்னை விரும்பி வாழும் என் தலைவி நான் அழுவதைக் காட்டிலும் பெரிதும் அழுவாள்.
- அவள் உயிர்தங்கி இருப்பதற்குக் காரணமே உன் மேல் அவள் கொண்ட காதலே ஆகும். ஆதலால் வன்பறழ் தளிர் முற்றி நிறம் மாறுமுன்பே உண்பாற் போல, நீயும் இவள் பருவத்தே மணந்து வாழவேண்டும் என்று தோழி தலைவனுக்குக் கூறுகிறாள்.

46. <u>தலைவனின் பிழையை அறிவுறுத்தி தோழி தலைவனுக்குக் கூறியது யாது?</u>

- தலைவன் திருமணத்தை நினையாது தொடர்ந்து களவினை நீட்டித்தான். தொடர்ந்து வருதலின்றி இடையிட்டு வராலானான்.
- இதனால் தோழி தலைவனைச் சந்தித்து விரைவு கடாவ இயலாதவளாய் ஒரு நாள் அவன் குறைகளைச் சுட்டிக்காட்டி வரையுமாறு வற்புறுத்துகிறாள்.
- குரங்கின் தலைவனாகிய நிறம் விளங்குகின்ற மயிரையுடைய கடுவன்(ஆண் குரங்கு) பிரம்புக் கோலினால் அகன்ற பாறையில் உள்ள மழைநீரின் நீர்க்குமிழிகளில் உள்ள ஈக்களை அடிக்கும் மலைநாட்டுத் தலைவனே.
- நான் உன்னை பெரிதும் விரும்புகிறேன். அப்படி விரும்பிய என் பிழையால் உன்னைக் காணாத பொழுது என் நலம் வாட்ட முறுவது இயல்பு தான்.
- ஆயினும் யான் உன்பால் அன்பு செலுத்துவது போல நீயும் என்மீது அன்புசெலுத்தினால் என் அழகு கெடாது.
- நீ அருளாமையாலேயே நின்னை யாம் நயந்தமையால் அழிந்த எம் அழகு மீண்டும் துளிர்க்காதொழிந்தது. இனியேனும் நின் பிழையுணர்ந்து எனக்கு அருள் செய்க என வேண்டி நிற்கிறாள் தோழி.

47. <u>சிறுவெண் காக்கைப் பத்தில் ஆற்றுவிக்கும் தோழிக்குத் தலைமகள் கருத்தினை விளக்குக.</u>

<u>முன்னுரை:</u>

- சங்க அகப்பாடல்களில் தலைவி தலைவன் இருவருக்கும் இடையேயான பிரிவு பல நிலைகளில் கூறப்படும்.
- களவு நிலையில் இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர் தலைவன், தலைவி இருவரும் வரைந்து கொள்ளுதற்கிடையே பிரிவு நிகழ்தலும்,
- கற்பு நிலையில் பொருள் வினை, போர் வினை மற்றும் பரத்தையர் கூட்டம் தொடர்பாகப் பிரிவு நிகழ்தலும் உண்டு.

- இப்பிரிவுகள் நிகழ்கின்ற காலத்தில் தலைவி பிரிவுத் துன்பத்தால் பெரும்பான்மையாக வருந்துபவளாக காட்டப்படுவாள். சில பிரிவு நிலையில் தலைவனுக்கும் பிரிவுத் துன்பம் உண்டு.

ஆற்றுவிக்கும் சூழல்கள்:

தலைவன் வரைவிடை வைத்து பொருள்வயிற் பிரிதல், போர் வினைக்காகவும், பொருள் தேடுதற்காகவும் பிரிகின்ற நிலையிலும், பிரிவாற்றாதிருக்கின்ற தலைவியை தோழி ஆற்றுபடுத்துவாள்.

ஒரு வழித் தணந்துழி ஆற்றுவிக்கும் தோழிக்கு தலைவி கூறியது:

- ❖ பெரிய கடற்கரையில் வாழும் கழுத்தின் கீழ் வெண்மைக் கோட்டை உடைய சிறுவெண்காக்கையானது, கருமையான கிளைகளையுடைய புன்னைமரத்தில் தங்கும். அத்தகைய கடற்கரைத் தலைவன் பொருட்டு பசலையுற்று மெலிந்த நெற்றியும் அழகழிந்து போக தலைவனை விரும்பியதால் என் நெஞ்சம் நம்பிக்கையிழந்து வருத்தமுற்று பிரிவு துன்பத்தில் கிடந்து தவிக்கிறது.
- ❖ சிறுவெண் காக்கையானது சிறுமீனையுண்டு விட்டுத் தன் பசி தீர்ந்ததால், பூக்களின் மனம் வீசுகின்ற பூந்தோட்டத்தில் இனிதே தங்கியிருத்தலைப் போலத் தலைவனும் தன் ஆர்வந்தீர நம்மைக் களவின் கண்ணே முயங்கியபின்னே, தன் மனைக்கண் சென்று, நம்மை மறந்து மகிழ்வோடு இருக்கிறான். முன்பு அவன் சொன்ன சொற்கள் இன்று பொய்யாயின.
- ❖ தன் பசிக்கு உணவாக கருதி, மீனின் அழிவைப் பற்றி ஏதும் கருதாத காக்கைபோலத், தலைவனும், நம்மைத் தன் காமப் பசிக்கு உணவாகக் கொண்டுவிட்டு, நம்மிடம் அன்பில்லாதவன் ஆனான்.
- ❖ பெரிய கடற்கரையில் உள்ள சிறுவெண்காக்கையானது, கரிய சுழியில் எழுகின்ற அலைகள், கரையிலே மோதிச் சிறுதுளிப்படும் ஒலியினைக் கேட்டவாறே உறங்கும்.
- ❖ அத்துறையினையுடையவன் தலைவன், அவன் என்னைப் பிரிந்ததால் என்னுடைய முன் கைகளில் உள்ள வளையல்கள் தானே கழன்று ஓடின.
- ❖ பெரிய கடற்கரையில் வாழும் சிறுவெண்காக்கையானது, அக் கடலிடத்து மீனையுண்டு வாழாது, நீர் அறுசுழிச் சிறு மீன்களாகிய அயிரையை வயிறுநிறையத் தின்னும், தலைவனும் பெருமையாளனாக இருந்தும் நீர்மைமிக்க மனைவியை மணந்து வாழாமல், அன்புச்செறிவற்ற புல்லிய பரத்தையரிடம் மயங்கிக் கிடக்கின்றான் அதனால் தலைவன் சொல்லிய உறுதிமொழி பொய்யானது. தனது ஒளி பொருந்திய வளையல்கள் கழன்று விழுகின்றன என்கிறாள் தலைவி.

தலைமகனுக்குப் புறத்தொழுக்கம் உளதாகிய வழித் தலைவி தோழிக்கு கூறியது:

- ❖ பெரிய கடற்கரையில் வாழ்கின்ற சிறுவெண் காக்கையானது, கரிய கழியிடத்தில் வாழும் அயிரைமீன்களை விரும்பி உண்ணுகின்ற, குளிர்ச்சியான நீர்த்துறைக்கு உரியவன் தலைவன்.
- ❖ அவன் தகுதியானது, புல்லிய ஒழுக்கமாக அமைந்து நமக்குத் தீங்கு செய்கிறது. அத்துடன் அவனுக்கும் பழிச் சொல்லைத் தந்தது.

48. குற்றமும் தண்டனையும் குறித்து ஊன்பொதி பசுங்குடையார் கூறுவனவற்றைத் தொகுக்க.

- ☘ ஊண் பொதி பசுங்குடையார் சோழன் நெய்தலங்கானல் இளஞ்செட் சென்னியைப் பற்றி பாடாண் திணையில் இயன்மொழி துறையில் பாடினார்.

- அமுதத்தையும் தன் சுவையால் வெல்லுவதும், உண்ண உண்ணத் தெவிட்டாத மணங்கமழும் தாளிதத்தை உடையதுமான உணவை, வருபவருக்கு எல்லையின்றி வழங்குபவர் உன்தேவியார்.
- வசையில்லாத வாழ்வினரான அவர் தழுவுவதை அல்லாது, மள்ளர் மோதுவதற்கு அஞ்சும், பன்னிற மாலையணிந்த திண்ணிய மார்பனே! ஒன்றைச் செய்து, பின் அதற்காக வருந்தாது, முதலிலேயே செம்மையாக எதனையும் செய்பவன் நீ!
- நெடுந்தொலை வரைக்கும் பரந்தது நின் புகழ்! நெய்தலங் காலத்து நெடியோனே! நின் வழியிலே செல்பவரை விரைவில் உணர்ந்து கொள்பவன் நீ! புறம்கூறுவார் சொற்களை நீ கேட்கவே மாட்டாய்!
- கொடுமை என்று உன் மனத்திலே முடிவாகக் கருதிய ஒன்றை ஒருவன் செய்யக் கண்டால், முறைவழுவாது நடுநிலைநின்று ஆய்ந்து அவனுக்குரிய தகுந்த தண்டனையை அளிப்பாய்.
- அவனே வந்து உன் திருவடிகளைப் பணிந்து நின்முன் நின்றால், தண்டனையையுங் குறைத்து, முன்னிலும் பெரிதாக அவன்பால் அன்பும் பாராட்டுவாய்.
- உன்னை அடைந்து எம் துயரைத் தீர்த்துக் கொள்ளக் கருதி நானும் வந்தேன். உன்னை புகழ்கின்றேன் எனக்கு அருள்வாயாக.

49. <u>“நீர்நிலை பெறுக” - பாண்டியனுக்கு குடபுலவியனார் கூறுவனவற்றைத் தொகுத்துரைக்க.</u>(10)

பாண்டியன் நெடுஞ்செழியனைப் பற்றிப் பொதுவியல் திணையில் முதுமொழிக் காஞ்சித் துறையில் பாடியவர் குடபுலவியனார்.

<u>முதுமொழி:</u>

“நீர் இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்”

- நீர் நிலை பெருகத் தட்கவே, அறன் முதலான மூன்றும் பயக்கும்’ என்பது கூறியதால், இது முதுமொழிக்காஞ்சி ஆயிற்று. உயிருக்கு உறுதி தருகிற பொருளைக் கூறுவதால், ‘பொருண்மொழிக் காஞ்சியும்’ ஆயிற்று.
- உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்’ என்னும் பொன் மொழியைத் தந்தது இப்பாடல்.

<u>குடபுலவியனார் அறிவுரை:</u>

- ஒலி முழங்கும் கடல் சூழ்ந்த பரந்த நாடு இந் நாவலந்தீவு. இதனைத் தம் அரிய முயற்சியால் வெற்றிகொண்டு புகழ் பெற்றுத் தாமே ஒரு குடைகீழ் அரசாண்ட வலிமை உடையவர் பாண்டியர்.
- அவர் வழி வந்தவனே! கோடியினும் மேலான ஆண்டுகளாக நின் வாழ்நாள் நீடிப்பதாக! வானை மீன்களும், ஆரள்களும், வரால்களும், கெளிறுகளும் நிறைந்த அகழி சூழ்ந்ததும், வானம் அளாவிய மதிலைக் கொண்டதும் ஆகிய பழைய ஊரைத் தலைநகராக உடையவனே!
- வலிமிக்க வேந்தனே! நீ மறுமை இன்பத்தை விரும்பினாலும், உலகு முழுவதையும் வெல்ல வேண்டுமென நினைத்தாலும், நிலைபெற்ற புகழை விரும்பினாலும், அதற்குச் செய்யவேண்டுவன யாவை எனக் கேட்பாயாக!
- நீர்மை இன்றி வாழாது உடல். அவ்வுடலுக்கு உணவு கொடுத்தவரே உயிர் கொடுத்தவரும் ஆவர். உணவால் உளதாவதுதான் மனித உடல். உணவோ நிலத்தின் விளைவும், நீரும் ஆகும்.

- நீரையும் நிலத்தையும் ஒருங்குகூட்டி வேளாண்மைக்கு உதவுக, அவ்வாறு உதவியவரே உலகத்தில் உயிரையும் உடலையும் நிலைநிறுத்தி வாழ்வித்தவராவர்.
- புன்செய் நிலம் இடமகன்றும் விளையுள் பெருக்காமையினால் பயன் அற்றதாகும். எனவே, செழியனே! இதனை நீ எண்ணுக.
- நீர் தடிந்து குளம்தொட்டு நின் நாடு எங்கணும் வளம் பெருக்குவாயாக! இது செய்தோர் மூவகை இன்பமும் பெற்றுப் புகழடைவர். அல்லாதோர் புகழ்பெறாது மடிவர் எனவும் உணர்வாயாக!
- வேளாண் பெருக்கமே மன்னர்க்கு வலிமையும் புகழும் தரும் அதற்கு நீர் நிலைகளான குளம், ஆறு, கிணறு போன்ற நீர் நிலைகளைக் பாதுகாக்க வேண்டும் என்கிறார்.

50. <u>மன்னனின் சிறப்பாகப் புறநானூறு கூறுவன யாவை?</u>

- கோப்பெருஞ் சோழனின் நல்லியல்பைப் பற்றி பாடாண் திணையில் இயன்மொழி துறையில் பிராந்தையார் சிறப்பித்துப் புகழ்ந்து பாடினார்.
- பொத்தியாரோடு நட்புக்கொண்டு விளங்கும் சோழனது மாண்பையும் கூறுகிறார்.
- குற்றமற்ற நட்பினனாகப் பொத்தி என்னும் புலவனொடு நாடோறும் பேசி மகிழ்ந்து வாழ்பவன்.
- உறையூர் என்னும் படை வீட்டிடத்திலே பசிக்குப் பகைவனாகப் பாடிவரும் பாணரின் சுற்றத்திற்கு வழங்கி உதவுபவனாக இருக்கின்றவன்.
- மதுவை ஆமை இறைச்சியுடன் ஆசைதீர உண்டும் அமையாது, ஆரல்மீனின் கொழுப்பான கறியைக் கன்னம் புடைக்க அடக்கிகொண்டு, தம் தொழிலையும் மறந்து திரியும் உழவர் மலிந்த வளமிக்க சோணாட்டு மன்னவனாக விளங்குபவன், கோப்பெருஞ் சோழன் அவனே, என் கோமான் என்கிறார்.

51. <u>எத்திசைச் செலினும் சோறே" - அவ்வையாரின் கருத்துக்களை புலப்படுத்துக</u>. (5)

- வாயிற் காவலனே! பரிசிலர் நாங்கள் வள்ளல்களின் காதில் தெளிவான மொழியை விதைத்து, எண்ணி வந்த செயலை முடித்துக் கொள்ளும் உறுதி கொண்ட நெஞ்சம் உடையவர்கள். சீர்வரிசை பெறுவதற்காக வருந்தும் வாழ்க்கை இது. அரசன் நெடுமான் அஞ்சி பரிசிலர்க்கு அடைக்காத வாயிலை உடையவன்.
- காக்கும் மன்னர்களின் வழித்தோன்றல் தன் தரமறியானோ? அன்றி, எம் தரமும் அறியானோ? அறிவும் புகழும் உடையவர் பசியால் இறந்தார் எனும் வறுமையுற்ற உலகம் அன்று இது.
- அதனால், இசைக்கருவியான எம் யாழைத் தூக்கினோம்; அதனை என் பையில் வைத்துக்கொள்கிறேன்.
- விறகு வெட்டிப் பிழைக்கும் கை வலிமை கொண்ட சிறுவர்கள் கையில் கோடரியோடு காட்டுக்குச் சென்றால், ஏதாவது ஒரு மரம் கிடைக்காமல் போகுமோ?
- அது போலப் பரந்த இவ்வுலகிலே பரிசிலர் நாங்கள் எந்தத் திசையிலே சென்றாலும், அந்தத் திசையில் சோறும் தட்டாது கிடைக்கும் என்று நின் வேந்தனிடம் அறிவிப்பாயாக.

52. புறப் புண்பட்டு வீழ்ந்த மகனின் உடலைக் கண்டு <u>உவகைக் கலுழ்ச்சி</u> அடைந்த தாயின் வீரத்தை காக்கை பாடினியார் வழி நின்று விளக்குக.

<u>முன்னுரை:</u>

தன் மகன் வீர மரணம் அடைந்தான் எனக் கண்ட தாயின் உவகையும், சோகமும் ஒருசேரக் காட்டும் சிறந்த செய்யுள் இது. அவனைப் 'படையழிந்து மாறினன்' எனக் கேட்டதும், அவள் கொண்ட கொதிப்பைப் பற்றி பின் வருமாறு காணலாம்.

<u>உவகைக் கலுழ்ச்சி:</u>

போர்க்களத்திலே வாளால் உண்டான விழுப்புண் மிக்க உடம்பைக் கண்டு மகிழ்ந்து கண்ணீர் வடிப்பது உவகைக் கலுழ்ச்சியாகும்.

<u>காக்கை பாடினியார் நச்செள்ளையார் பாடிய பாடலின் விளக்கம்:</u>

- காக்கை பாடினியார் நச்செள்ளையார் தும்பை திணையில் உவகைக் கலுழ்ச்சி துறையில் பாடிய பாடல் இது.
- நரம்புகள் புடைத்துத் தோன்ற, வற்றி உலர்ந்த தோள்களும் தாமரை இலைபோன்ற அடிவயிறும் உடைய முதிய தாய் ஒருத்தி, அவள் 'தன் சிறுவன் படையினை விட்டுப் போரிலே புறங் கொடுத்து ஓடினான்' என்று அறியாதார் வந்து கூறக் கேட்டு மனக் கொதிப்படைந்தாள்,
- "அவ்வாறு அவன் புறங்கொடுத்தானாயின், அவனுக்குப் பாலூட்டி வளர்த்த என் முலையையே அறுத்து எறிவேன்" என்று வஞ்சினங்கூறிப் போர்க்களஞ் சென்றாள்.
- கையில் வாளும் கொண்டவளாகப் பிணக்குவியலைத் தேடினாள். அப்போது, ஒருபால், அச் செங்களத்திலே சிதைந்து வேறாகி வீழ்ந்து கிடந்த அவள் மகனின் உடலைக் கண்டாள்.
- அப்போது அவள் கொண்ட மகிழ்வு, அவனை அவள் பெற்றபொழுது கொண்ட மகிழ்வினும் காட்டிற் பெரிதாயிருந்தது!

53. சேரலாதனின் வெற்றிச் சிறப்பை விளக்குக.

<u>மாகூர் திங்கள் போன்றவன்:</u>

- பகல் பொழுது அதிகம் ஆகாமல் இரவுப் பொழுது மிக்கு விளங்குகின்ற மாசியின் தன்மை நிலைபெற்ற, மாக்களெல்லாம் குளிரால் உடம்பு நடுங்குகின்ற மாதத்தில் பனி பெய்யும் அரிய வழியிலே செல்லும் பாணன் உவப்பவும்,
- புல்லிய இராப்பொழுது நீங்கவும், உலகத்து உயிர்களுடைய வருத்தம் நெடுந்தூரத்தே அகலவும், உலகெங்கும் பரவிய இருள் நீங்கும்படி பல கிரணங்களைப் பரப்பி, சூரியன் கீழ்த்திசையிலே தோன்றினாற்போல,
- இரத்தலையுடைய பரிசிலரின் சிறிய குடும்பங்கள் வளர்ச்சியடையும்படி உலகத்தைத் தாங்கிய மேம்பட்ட கல்வியையுடைய விற்படையுடையோரது கவசம் போன்ற சேரலாதனை!
- ஏனையரசரினும் வேறாகிய தனிச்சிறப்பும் பெருமையும் பொருந்திய அரசர்க்கெல்லாம் அரசனாக இருப்பவனே!
- நினக்குப் புகழ்ச்சி மிக்க நல்ல ஆபரணங்களைத் தருகின்ற நாடுகளை நினது பெருத்த தோதள்களில் வைத்துப் பாதுகாத்தல் நினது கடனாகும்.

54. சேரலாதனின் குணங்களை எடுத்துரைக்க. (10)

- உம்முடைய தலைவன் யாரெனக் கேட்டவற்கு பரிசில் பெற்ற பாணன், என்னுடைய தலைவன் கடலிடையே உள்ள தீவினுள் வாழும் பகைவரைக் கடல் மேற்சென்று கொன்று, அப்பகை மன்னனது காவல் மரமாகிய கடம்ப மரத்தினை வெட்டிய வலிமையுடைய நெடுஞ்சேரலாதன் ஆவான்.

பொய்த்தலறியாதவன்:

- பகைவர் நாட்டின்கண் படையெடுத்து சென்று செய்த போரில் பின்வாங்குதலை வெயில் துகளளவேனும் அறியாதவன்.
- கண்ணிலே உவப்பை வெளிப்படுத்தி உள்ளத்தின் கண்ணே மலர்ச்சியில்லாமல் பகை கொண்டுள்ள பகைவரிடத்தும் கனவினும் பொய் கூறுதலை அறியாதவன்.
- அரசியல் காரணமாகப் பொய் கூற வேண்டிய சூழல் நேருமாயினும் அப்பொழுதும் பொய்த்தலறியான்.
- இந்நிகழ்வு, பாரத த்தில் தனக்கு வெற்றியுண்டாகுமாறு போர் தொடங்குதற்குச் சிறந்த நாட் கேட்ட துரியோதனனிடத்தும் பொய்யாது நாட் கூறிய சகாதேவன் செயலும் இத்தன்மைக்கு எடுத்துக்காட்டாகச் சொல்லப்படுவதுண்டு.

வீரத்தன்மை:

- எழுச்சியுனான நடையைக் கண்டு பகைவர்கள் அஞ்சி நடுங்கி அழியுமாறு படையெடுத்துச் சென்று பகைவர் படையில் உள்ள வடித்துச் செய்த மணி மாறியொலிக்கும்படி நடக்கும் மதம்மிக்க யானைகளின் கூட்டம் அலறியோடும்படி செய்து மிக்க பெரிய நிலப்பரப்பினையுடைய பகைவர் நாட்டை வஞ்சியாது எதிர் நின்று வென்று புலவர்கள் தன்னைப் புகழ்ந்து பாடுமாறு புகழ் நிறுத்தியவன்.
- பகைவர் நாட்டின்கண் பெற்ற விரிந்த தலையாட்டத் தினையுடைய குதிரையினையும் யானைகளையும் தேரினையும் வயிரியர் கண்ணுளர் என்னும் இருதிறக் கூத்தருக்கும் தனக்கென்று கொள்ளாமல் வழங்குபவன்.
- மிகுந்த காவலையுடைய காவற் காட்டையும், ஆழமான அகழியையும், உயர்ந்த புற மதிலையும், நிலையான மதிலின் உச்சியையும், அம்புக் கட்டுக்களையும் உடைய அழித்தற்கரிய மதிலை உள்ளே புகுந்து அழித்துச் சமையல் செய்தலால் உண்டாகாமல் ஊரினை நீ சுடுவதனால் உண்டாகிய புகையை உடையதும் பகைவரைக் கொன்று பெருமிதத்தால் மலரப் பெற்றதுமாகிய மார்பினை உடையவன்.

கொடைத்தன்மை:

- பாணருக்கும், கூத்தருக்கும் பொருநர் போன்ற பிறருக்கும் இவரன்றித் தம்மில் பரிசு பெற வரும் வேறு யாவராயினும் பரிசில் பெறுவதற்குரிய வகையில் எவ்விதத் கலையிலும் வல்லவராக இல்லாமல் இருப்பினும்,கொடுத்தலாகிய கடமையை மட்டும் நோக்கி நம்மவரென்றும் பிறரென்றும் பாராமல் ஈயும் ஒருபாற் கோடாத நெஞ்சினையுடையவன்.
- குளிர்ந்த இயல்பையுடைய மேகம் விட்டாலும் தன்னைச் சார்ந்தவர் வயிறு பசிக்கும்படி ஈயாமல் இருக்கமாட்டான். அவனைப் பெற்ற தாயின் வயிறு குறையின்றி விளங்குவதாம்.

55. பொருள் நிலையற்றது எங்ஙனம்? கலித்தொகை வழி விளக்குக?

<u>பாலைநிலத்தின் கொடுமை.</u>

- நடுவு நிலைமையோ, நன்மையோ இல்லாமல் வேலைவாங்கும் கொடிய அரசன்போல ஞாயிறு வெயிலால் காய்ச்சுவதால் துன்புற்று, மதம் ஒழுகும் ஆண் யானை தன் கையையும் தந்தங்களையும் ஊன்றிக் கொண்டு நிலத்தில் கிடக்கும் காய்ந்த மலைக்காட்டு வழியே என்னிடம்கூடச் சொல்லாமல் செல்லத் துணிந்துள்ளவரே! ஒன்று சொல்கிறேன் கேளுங்கள்.

<u>தோழி தலைவனிடம் கூறுதல்:</u>

- ஐயனே! அன்பில்லாத அமைச்சன் நடுவுநிலைமை நீங்கித் தன் மனம் போனபடி செயலைச் செய்யுமாறு கூற, அதன்படி செயல்பெறும் கொடுங்கோல் மன்னன் போன்று சூரியன் காட்டில் காய்ந்ததால் தளர்ந்து எய்த்த யானை வறண்ட நிலத்தைத் தன் தந்தத்தைக் கலப்பையாகக் கொண்டு ஊன்றி நிலத்தில் சோர்ந்து கிடக்கும் காட்டுவழியில் எம்மிடம் சொல்லாமல் செல்லத் துணிந்தீர். உமக்கு ஒரு செய்தி சொல்ல விரும்புகிறேன். கேளும்!
- இசையை விரும்புகின்றவர்களுக்கு யாழ் நல்விருந்தாக அமையும். யாழை மீட்டி வாசிக்கும்போது ஒரு நரம்பு அறுந்து போனால் யாழின் இசை இன்பம் நிலையற்றுப் போகும். அதை விட நிலையற்றது பொருள். அதை விரும்பலாமா?
- ஒருவரைச் செல்வம் வந்து அடையும்போது பலரும் அவரைப் புகழ்வர். அச்செல்வத்தை இழந்து நிற்கும்போது அம்மக்களே மனம் மாறிப் பழிப்பர். இவ்வாறு நிலையற்ற இயல்புடைய பொருளை விரும்பலாமா?
- தன்னலமின்றித் தன் பயன் கருதாமல் அரசனின் நன்மைக்காகச் செயலாற்றியவரை அரசன் சினந்து எக்காரணமுமின்றி அருள் இல்லாமல் கொலைத் தண்டனை விதிக்கும் அரசனின் பண்பைவிட நிலையற்ற பொருளை விரும்பலாமா?
- அதனால் பெரும்பொருளை விரும்பிப் பிரியும் எண்ணத்தை விடுக. நாட்டை மன்னன் நல்வழியில் காக்கின்றான். உம்மை நாடி வரும் விருந்தினரை உபசரித்து இல்லறம் நடத்தி இவளோடு கூடி வாழ்ந்தால் அந்த வாழ்வுதான் பொருள். நீர் நினைக்கின்ற புறப்பொருள் பொருளாகுமா?

56. நோயும் நோன்பும் குறிந்துக் குறிஞ்சிக் கலியில் (கலித்தொகை) கூறும் செய்தியை விவரிக்க.

<u>தைந்நீராடல்:</u>

- தை மாதம் விடியற் காலத்திலே எழுந்து நீராடி ஆண்டவனை வழிபட்டு நோன்பு இருக்கிறார்கள் சிறு பெண்கள்.
- மரத்தால் பாவை அமைத்து விளையாடுவர் நீராடும் மகளிர்; அவை ஆண் பாவை, பெண் பாவை என அமையும்; ஆண் பாவையைச் சிறுமுத்தன் என்பர்.
- நீராடு மகளிர் விளையாடுங்கால் பாவைத் திருமணம் நடத்துவர். பெண்ணைக் கொள்வதற்காகச் சிறு சோறு சமைப்பர். இதனை ஆயத்திற்கு இட்டு மகிழ்வர்.
- துறவுக் கோலம் கொண்டு தவநெறி பற்றியிருக்கிறார்கள். தலை சீவி முடிப்பதில்லை. மலர்கள் சூடுவதில்லை.

- உடம்பிலே அணிகள் புனைவதில்லை. கையில் வளையல் இல்லை. இப்படியாக சந்நியாசிப் பெண்களைப் போல காட்சியளிக்கிறார்கள். வீடு வீடாகச் சென்று பிச்சை எடுத்து உண்கிறார்கள்.
- நல்ல கணவரைப் பெறுதல் வேண்டி நோன்பினை மேற்கொள்கிறார்கள்.

<u>நோயும் நோன்பும்:</u>

- ஒரு இளைஞன் துறவுக்கோலத்தில் இயற்கை எழிலுடன் நிற்கும் மங்கை ஒருத்தியைக் காண்கிறான். காதல் கொள்கிறான்.
- அவளிடம் தன் காதலை சொல்கிறான். என் உள்ளங்கவர்ந்து செல்பவளே! உன் பால் நான் காதல் கொண்டேன். அதனால் துன்புற்றேன்.
- துன்பத்தால் அறிவு மயங்கினேன். நான் கூறுவதைக் கேள் என்றான். நான் துன்புற்று வாடுகிறேன். நீயேன் இவ்வாறு வருந்துகிறாய் என்று கேட்கவில்லை? இரக்கமில்லை உனக்கு. நோன்பிருக்கிறாய்.
- நோன்பு இருப்பவர் பிறரைத் துன்புறுத்தல் கூடாது. பிறர்பால் இரக்கம் காட்டவேண்டும். அப்போதுதான் நோன்பின் பலனை அடைவார்கள். நீயோ அவ்விதம் இரங்கி கேட்கவில்லை.
- உனக்கு நோன்பின் பலன் கிடைக்குமா? பிச்சையெடுத்துப் பிறர்க்குக் கொடுக்கிறாய். எதனால்? நீ வேண்டிய பலன் கிடைக்க வேண்டும் என்பதற்காக. நானோ! நின்பால் யாசிக்கிறேன்.
- நீயோ யாசகனுக்கு அளிக்கும் இரக்கமற்றிருக்கிறாய். நோன்பிருக்கிறாய். அதன் பலன் கிட்டுமா? கிட்டாது. எனவே, எனது விருப்பத்தை நிறைவேற்று. நீ கோரிய பலன் கிடைக்கும்.

57. "கூற்று நக்கது போலும்" - மாலைக்காலத்தை தலைவி நெய்தற் கலியில் எவ்வாறு பழித்துப் பேசிகிறாள்?

<u>அச்சம் தரும் மாலை</u>

- "மாலைக் காலமே! வந்துவிட்டாயா? என்று கேட்கிறாள். இம்மைக்கும் மறுமைக்கும் பயன் தரத்தக்கது அறம் ஒன்றுதான். இதை அறியாதவன், அறம் செய்யாதவன், எப்படி நாளுக்கு நாள் சிறிது சிறிதாகப் பயந்து மருண்டு நெஞ்சிலே இருளடைவானோ அப்படி இருளை உமிழ வந்தாயா?
- கதிரவன் கடைவாயில் விழவந்தாயா? யாசகம் என்று வருகிறவனைக் கண்டு கண்ணை மூடிக்கொள்கிறவனைப் போல மரத்தின் இலைகள் எல்லாம் குவிகின்றன! அடிவானம் சிவந்திருக்கிறது.
- பிறையும் சிறிது சிறிதாகக் காட்சி தருகிறது, ஊழிக் காலத்திலே ருத்திர மூர்த்தியானவன் உயிர்களைக் குடித்து ரத்தம் சிந்தி இடி இடியென்று சிரித்தபோது தோன்றும் கோரைப் பல் போல! மாலையே! எனக்குத் துணை யாருமில்லை.

<u>மானின் துன்பம் - மாலைக்காலம்</u>

- என் துணைவர் பிரிந்திருக்கிறார். இந்த நேரத்திலே என்மீது பாணம் தொடுக்கலாமா? துயரத்தில் ஆழ்த்தலாமா? வெள்ளத்திலே அகப்பட்டுக் கரையேற முடியாமல் தத்தளிக்கும் மான்போல் இருக்கிறேனே!

- அந்த மான்மீது அம்பு விடும் வேடன்போல் வருகிறாயே! இரக்கமின்றி என்மீது போர் தொடுக்கிறாயே! போரிலே தோற்றவரைப் பார்த்துச் சிரித்தால் அவர் மனம் எப்படியிருக்கும்? அப்படியிருக்கிறதே, என் மனம்!

<u>வெந்தபுண்ணில் வேல் பாய்ச்சும் மாலை</u>

- மாலையே! சான்றவராகிய என் காதல் எனக்குத் துணையாக இருந்து என் துன்பத்தைக் கலையாத காலத்தில் வெந்த புண்ணிலே வேலைச் செருகலாமா! செருகிறாயே! மாலையே! நீ தான் என் துன்பத்திற்கு காரணம்.
- இவ்வாறு மனம் புழுக்கிக் கூறிக்கொண்டிருந்தாள் தலைவி. அப்போது தலைவன் வந்தான். அவன் வந்ததும் வேதனை எல்லாம் வேகமாய் மறைந்தன.

58. கலித்தொகை மருதக்கலியில், தலைவி தன்னுள்ளே அழிந்து கூறியது யாது? (அல்லது) மருதக் கலியில் சிறுவனைத் தலைவி கடிந்துக் கூறக் காரணம் என்ன?

- கோயிலுக்குச் சென்று சாமி கும்பிட்டு வருவதற்கு சிறுவனை வெளியே அனுப்பிருந்தாள் தலைவி. சிறுவனுக்குத் துணையாக வேலைக்காரியும் போனாள்.
- நீண்ட நேரமாயிற்று. வரவில்லை. வழிமேல் விழி வைத்துக் காத்திருந்தாள் தலைவி. சிறுவனும் வந்தான். கோலாகலமாகச் சிங்காரித்து வந்தான்.
- "என்னடி? யார் இவனுக்கு இப்படிச் சிங்காரித்தவர்? எங்கே அழைத்துப்போனாய்? என்று வேலைக்காரியிடம் கேட்டாள் தலைவி.
- "ஆடல் மகளிர் சிலர் இவனைப் பார்தார்கள்". "பார்த்தார்களா? அவர்கள் தான் இப்படிச் சிங்காரித்து அனுப்பினார்களோ? இந்த மோதிரம் ஏது?
- "ஆடல் மகள் ஒருத்தி அணிந்தது. இதிலே மன் மதனுடைய மீன் கொடியல்லவா இருக்கிறது! அவள் என்னை ஏசிக் காட்டுவது போல் இருக்கிறதே! இந்தத் தொடி ஏது?
- "எல்லாம் அவர்கள் அளித்தது தான் என்றாள் வேலைக்காரி. "ச்சீ! மானங் கெட்ட பயலே! ஒருத்தி வீடு விடாமல் போனாயோ? அவர்கள் அணிந்ததை எல்லாம் வாங்கிக் கொண்டு வந்தாயா? என்று சீறினாள்.
- சிறுவன் நடு நடுங்கிப் போனான். சிறுவனின் நடுக்கம் கண்டாள் அவள். சினம் ஆறினாள். "தவறு யாருடையது?
- இவனுடையதல்ல: அந்தப் பரத்தை மகளிருடையதுமல்ல. இவன் தந்தையுடையதும் அல்ல. என்னுடையது தான். நான் இவனைக்கேட்டேன். கேட்டதால் தானே, இவ்வளவு வருத்தமும்? வருத்தத்தை விலைகொடுத்து வாங்கியவள் நானே! என்று தேற்றினாள்.
- வாடா கண்ணா! போனால் போகிறது. அழாதே! என்று கூறி அவனை அனைத்துக்கொண்டாள்.

59. ஊடல் கொண்ட தலைவன் - தலைவியின் நிலைப்பாட்டை மருதக்கலி வழி புலப்படுத்துக.

<u>தலைவன்:</u>

'மாறுபட்ட வேந்தர் இருவரின் படை போரிட வந்திருப்பதுபோல அகன்றிருக்கும். அல்குல், தோள், கண் ஆகியவற்றையும் குறுகியிருக்கும். நெற்றி, காலடி, இடை ஆகியவற்றுடன் அழகின் தெய்வமான காமனே தன் அம்பை விடும் அழகோடு அகன்ற தெருவில் வெண்ணெய் விற்பதற்காகச் சுழன்று சுழன்று நடந்து வருகிறாள். சிரிக்கக்கூட முடியாதவனாக நான் இருக்கிறேன்' என்று எண்ணி என் உயிரை வாங்க உன் அழகு என்னும் வேலைப் பாய்ச்சிய நட்போ பகையோ இல்லாத இகலாட்டியே! இப்படி என் உயிரை வாங்குவதற்கு நான் என்ன பிழை செய்தேன்?

**தலைவி:**

அப்படி நான் உன்னைத் துன்புறுத்தவில்லை. நீ என் இன ஆயன். ஆனால் நான் ஆய்த்தி. நீ காயாம்பூ மாலையைத் தலையில் சூடியிருக்கிறாய். கருமையும் துவர் நிறமும் கொண்ட காவி நிற ஆடை அணிந்திருக்கிறாய். மேயும் மாடுகளுக்கு முன் கோலை ஊன்றிக் கொண்டு நிற்கிறாய். நீ ஒரு ஆயன் அல்லவா? அல்லது வேறொருவனா? ஞாயிறு தெய்வம் பெற்றெடுத்து ஒளியுடன் திகழும் மகனாகத் தென்படுகிறாய்.

**தலைவன்:**

நீ இப்படிச் சொல்வதால் என்னால் வாயை மூடிக் கொண்டு இருக்க முடியவில்லை. முல்லை மொட்டும், முல்லை அரும்பும் வரிசைப்படுத்தி வைத்தது போன்ற பற்களும், மூங்கில் போன்ற தோளும், என்னைத் தாக்கிப் போர்புரியும் கண்களும் கொண்டவளாய் இருந்துகொண்டு, என்னை நல்லழகன் என்று பாராட்டுபவளே! உன்னை எதிர்த்து யாராவது பேச முடியுமா?

**தலைவி:**

உன்னை நான் தடுக்கவில்லை. மண்டுபோல் பேசிக் குழந்தை போல் நடந்துகொள்கிறாய். என்னைக் கண்டவுடன் முன்பே தெரிந்தவர்போல் நான் விற்கும் வெண்ணெய்பற்றி வினவி, என் உறுப்புகளையும் பாராட்டி, தொட வருகிறாய். உன் மனத்தில் என் நினைத்துக் கொண்டிருக்கிறாய்? உன் நெஞ்சுக் களத்தை ஆள என்னால் எப்படி முடியும்? புனத்தில் இருக்கும் என் தந்தைக்கு சோறு கொண்டு செல்வாயா? பசு இனத்தோடு இருக்கும் என் தந்தைக்கு பால் கறக்கும் பாத்திரம் கொண்டு செல்வாயா? தினை வயல் பகுதியில் என் தாய் விட்டிருக்கும் கன்றுகளை மேய்ப்பாயா?

**தலைவன்:**

அப்படியே ஆகட்டும். வெண்ணெய் கடையும் ஓசை கேட்கிறது. உன் ஊர் பக்கத்தில்தான் இருக்கிறது எனத் தெரிகிறது. நண்பகல் பொழுது ஆயின் யாரும் பார்க்கமாட்டார்கள். மயில் கழுத்துப் போல் அழகுடன் திகழும் மாயவளே! இந்த வெயிலில் ஏன் விரைந்து செல்கிறாய்? அங்கே பார்! யானை தூங்குவது போன்ற பாறை உள்ளது. நுங்குத் தண்ணீர் போன்ற நீர் இருக்கும் சுனை உள்ளது. அதில் நீராடி, தளவம், முல்லை ஆகிய பூக்களைப் பறித்துச் சூடிக் கொண்டு, காயாபம்பூ பூத்திருக்கும் சோலையில் என்னோடு தங்கியிருந்து விட்டு வெயில் தாழ்ந்ததும் உன் ஊருக்குத் திரும்பலாம்.

**தலைவி:**

இப்போதே நான் போக வேண்டும். ஒரு காளை, எவ்வளவு பசுவின் பின் ஓடித்திரிகிறது? பல பசுக்களின் பின் அல்லவா? அந்த இயல்பு தான் உனக்கும் இருக்கும். உனக்கு ஒன்றும் தெரியாது விழித்திருக்கிற போதே தட்டிக் கொண்டு போகிறவராச்சே! என்றாள்.

**தலைவன்:**

பார்த்தேன்! ஆனால் உன்னைப் போன்று கொல்லும் விழி! கூறிய பல்! அன்று கொய்த மாந்தளிர் போன்ற மேனி! இந்த அழகு எவரிடமும் இல்லை. இந்த மண்ணுலகில் உன்னிடம் தான் நான் கண்டேன்! காதல் கொண்டேன். கருத்திலே பிழை ஏதுமில்லை. பேரின்பப் பேரழகே! சத்தியமாக திருமால் மேல் ஆணையாக சொல்கிறேன் என்றான்.

**தலைவி:**

நான் ஒன்று சொல்கிறேன் கேள். சாயங்காலம் வா! எங்கள் ஆயர்பாடிக்கு! அனைவரும் குரவைக் கூத்துக்கு சென்றியிருப்பார்கள் அதுவே சரியான சமயம். எங்கள்

தோட்டத்தில் காஞ்சி மரத்தின் அருகில் வந்து காத்திரு கட்டாயம் நான் வருவேன். எவரும் அறியாமல் வா மறைவாக என்றால். (10 - மிதப்பெண்)

---

## பொதுத் தமிழ் நான்காம் பருவம் அலகு - 3 & 4

### 1) திருமாலின் சிறப்புகளைத் தொகுத்துரைக்க.

**மறமும் அறமுமானவன்:**

- வெற்றிமிக்க பெருமை சான்ற புகழினை உடைய அந்தணர்களால் காக்கப்படும் அறுமும், உன்பால் அன்புடையவர்களுக்கு நீ அருளிச் செய்யும் அருளுமாக நீயே உள்ளாய்.
- நல்வழியில் செல்லும் திறனில்லாதவர்களை அந்த நல்வழியில் செல்லுமாறு திருத்திய குற்றமற்ற சிறப்புடைய மறமும், திருத்தும் அந்நிலையில் உனக்குப் பகைவராக மாறியவர்களை வருத்தும் துன்பமுமாக நீயே உள்ளாய்.
- அழகியதாய் இடமகன்று விளங்கும் வானத்தில் அழகிய ஒளியோடு திகழும் வெதுப்பும் கிரணங்கள் கொண்ட கதிரவனும் நீயேயாக விளங்குகின்றாய்.

**திருமாலின் மேன்மை:**

- ஐந்து தலைகளைத் தோற்றுவித்துக் கொண்ட அழித்தல் தொழிலுடைய, வெல்லற்கரிய திறமையும் வலிமையுமுடைய ஈசனும் அவனது ஒடுக்கும் தொழிலுமாக நீயே உள்ளாய்.
- முழுநலனைப் பொருத்தியதும் குற்றமற்ற மெய்யுணர்வினை நல்குவதுமாகிய வேதங்களும், தாமரை மலரில் விளங்கும் நான்முகனும், அவனால் இயற்றப்படும் படைப்புத் தொழிலுமாக நீயே விளங்குகின்றாய்.
- வானிடத்தே வலமாக உயர்ந்தெழும் மேகமும், மாகமாகிய விசும்பும், அந்த விசும்பு ஏந்திய நிலவுலகும், அதன்கண் நெடிதோங்கி உயர்ந்து விளங்கும் இமயமலையுமாக நீயே விளங்குகின்றாய்.

**நீயே உனக்கு நிகரானவன்:**

- அனைத்துப் பொருட்களாகவும், அவற்றின் பண்புகள் தொழில்களாகவும் நீ விளங்குவதனால் நீ இன்னாரைப் போன்றும், அவர்களின் இத்தகைய பண்புகள், தொழில்கள் ஆகியவற்றைக் கொண்டும் உள்ளாய் என்று உவமம் சுட்டிக் கூறுதற்கு அமைந்த தகுதி உடையவர்களை நாங்கள் இவ்வுலகில் காணவில்லை.
- மேலும், நீ பொன்னின் அழகுகொண்ட சக்கரப் படையினை உலகம் காத்தற் பொருட்டு வலப்பக்கத்தே ஏந்தியவனாகவும், நிலைபெற்ற உயிர்களுக்கெல்லாம் தலைவனாகவும் விளங்குகின்றாய்.
- இவற்றால், நீ உனது புகழொடு உயர்ந்து, உன்னையே ஒப்பவனாகத் திகழ்கின்றாய்.

### 2) செவ்வேளின் சிறப்புகளைத் தொகுத்துரைக்க.

**தேவர் சேனைக்குத் தலைவனாதல்:**

- ❖ குழந்தைப் பருவத்திலேயே முருகன், கையில் படைக்கருவி இல்லாமல் வெறுங்கையுடன் விளையாட்டாக இந்திரனுடன் செய்த போரில் இந்திரன் தோற்று ஓடினான்.

- தம்மைப் போன்ற தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரனின் தோல்வி கண்டு வருந்தாத நெருப்புக் கடவுள் குழந்தை முருகனின் வெற்றியைக் கண்டு மகிழ்ந்தான்.
- சூரன்மாவை அழித்து தேவர் குலத்தைக் காக்கத் தோன்றிய குழந்தையாதலாலும், நீ இறைவன் வடிவமாதலாலும் குழந்தையின் வெற்றிக்குத் தீக்கடவுள் மகிழ்ந்தான் எனலாம்.
- சூரன் தேவர்களுக்கு கொடுத்து வந்த துன்பம் நீங்கும் என்று கருதியதால் 'அல்லல் இல் அனலன்' என்று தீக்கடவுள் கூறப்பட்டான்.
- தீக்கடவுள் தன் ஆற்றலின் ஒரு பகுதியைப் பிரித்து கோழிச் சேவலாகவும், இந்திரன் தன் கூற்றிலிருந்து ஒரு பகுதியைப் பிரித்து அழகிய மயிலாகவும், கூற்றுவன் தன் ஆற்றலிலிருந்து ஒரு பகுதியைப் பிரித்து வெள்ளாட்டுக் குட்டியாகவும், தன்னுடைய தெய்வத்தன்மையிலிருந்து பிரித்து கொடுத்தனர்.

<u>முருகன் திருவடி அடைவோர்:</u>

- என் குணத்தானாகிய உனது அருட் குணத்தை விரும்பி ஏற்றுக்கொண்டு உனது திருவருளையே அடையும் நோக்குடன் உலகப் பற்றினை நீக்கி,
- உன்னைப் பற்றும் அறநெறி வழியில் வாழும் முறைமையுடையோரும், உனது திருவருட் கடலில் திளைத்து நின்று பெருந்தவம் செய்தவரும்,
- பிறரால் வணங்கிப் போற்றத் தகுந்த அருளாளருமாகிய இவர்கள் மட்டுமே உனது திருவடி நிழலை எளிதில் அடைவர்.

<u>முருகப் பெருமானிடம் வேண்டுதல்:</u>

- உன் திருவருளை விரும்பாத கயவர்களால் அடைய முடியாத உன் திருவடி நிழல் உன் அருட்குணத்தை எதிர்கொண்ட சான்றோர்களால் எளிதில் அடைய முடியும் என்பது உண்மையாதலின் தேர் உருளையைப் போன்ற பூக்கள் கொண்ட கொத்தினையுடைய கடம்பமலர் மாலையினை அணிந்த முருகப்பெருமானே!
- உனது திருவடிப்பேற்றை அடைய விரும்பும் யாம் உன்னிடம் வேண்டுவன இவ்வுலகில் இன்பம் துய்க்கப் பயன்படும் பொருள்களும், உலகப்பொருள்களைத் தருவதற்குக் காரணமாகிய பொன்னும் அவற்றால் துய்க்கப்படும் இவ்வுலக இன்பமும் அல்ல;
- எங்களுக்கு வீடு பேதளிக்கும் உனது திருவருளும் அத்திருவருளினைப் பெற நாங்கள் உன்னிடம் செலுத்தும் உண்மையன்பும், அவ்வன்பு உள்ளத்துள் தோன்றுவதற்குக் காரணமான அறமும் ஆகிய மூன்றுமேயாகும்.

3) <u>**வையையின் செயலும் ஊரார் கிளர்ச்சியும் பற்றி விளக்குக.**</u>

<u>வையை வரவு:</u>

- மலையின்கண் மாலைப்போதில் பெருமழை பெய்தது. அப்பெருமழையால் காலையில் வையையாறு வெள்ளத்துடன் கடலோடு கலக்கும் பொருட்டு,
- பல மலர்களால் ஆகிய போர்வையையும் பருத்த மணலையும் மேலே மூடிக்கொண்டு, உலகின்கண் பசி முதலிய துன்பங்கள் நீங்கவும் வண்டுகள் ஒலிக்கவும் வையையாற்றின் கரை காவலரை அழைக்கின்ற பறைகள் முழங்கவும் வந்தது.

<u>அருவி நீரைக் கண்ட மகளிர் செயல்:</u>

- வையையாற்றில் வெள்ளம் மிகுந்தது. அவ்வெள்ளத்தில் நீராட எண்ணிய மகளிர், தாம் புனலாடிக் களித்த பின்னர்த் தம் கூந்தலை உலர்த்தும் பொருட்டு புகைகக்கூடிய அகில் முதலியவற்றையும்,

❖ அவற்றைப் புகைக்க நெருப்பையும், சூடுவதற்குப் பூவையும் வையையாற்றுக்குரிய ஆராதனைப் பொருளாகிய அவியையும், பொன்மீன் முதலியவற்றையும் ஏந்திச் சென்றனர்.
❖ அத்துடன் தத்தம் காதலரையும் அவ்விழாவணி நாளுக்குரிய அணிகளையும் அணியச் செய்தனர்.

வையையின் செயலும் ஊரார் கிளர்ச்சியும்:

❖ மகிழ்ச்சி மிகுதியால் கைகள் பூரித்தன. கைகள் பூரித்தலால் தொடி எனும் அணி அழுந்தப் பண்ணவும், தோளில் அணிந்த வளைகள் முன்கையில் வந்து அலையவும்,
❖ மகளிரின் தோள் முதலியவற்றில் எழுதிய தொய்யில்கள் ஒன்றோடொன்று கலந்து அழிந்து போகவும், மேகலை போன்ற வடங்கள் இற்று உதிர்ந்து நூல் தோன்றவும்,
❖ ஆணி முத்து வடங்கள் கலக்கிப் பூசிய சந்தனம் முதலியவற்றால் நிறம் மழுங்கிப் போகவும், நகத்தில் எழுதிய செம்பஞ்சுக் குழம்பு அழிந்து போகவும்,
❖ முலைக்கண் பூசிய குங்குமக் குழம்பு வண்டலிட்டுக் குழம்பிப் போகவும், தலையிலணியும் படலைமாலையும் குலைந்துபோன கூந்தலும் பூசிய சாந்தினை அழிக்கவும்,
❖ மகளிரும் மைந்தரும் கலக்கவே இருவர் அணிந்த அணிகளும் தம்முள் மயங்கிச் சிக்கிக் கொள்ளவும் ஆகிய செயல்களையெல்லாம் இவ்வையைப் புனல் ஆற்றியது.
❖ மேலும் அவர்களது உள்ளத்துள்ளே இருந்த நிறையை இவ்வையை உடைத்தது. அதைப் போன்றே மலையையொத்த நீர் தடுக்கும் அணைகளையும் உடைத்தது.
❖ தன் அலைகளால் தன்னிரு கரைகளையும் அடைக்கும் பொருட்டுப் பறையறைய வேண்டுமென்று கரைகாவலர் ஊருக்கு உரைத்தனர்.
❖ உடனே அப்பறையொலி ஊர் முழுதும் எழுந்தது. அதனைக் கேட்டு ஊரிலுள்ளோர் எல்லோரும் கரையடைக்கக் கிளர்ந்தெழுந்தனர்.

4) கார்ப்பருவத்தின் வருகைப் பற்றி எழுதுக.

❖ மிக அகன்ற இடத்தையுடைய இவ்வுலகத்தை வளைத்துச் சங்கும் சக்கரமும் ஆகிய குறிகளைக் கொண்டனவும் திருமகளை அணைத்தனவும் ஆகிய வலிமையான கையினை உடையவன் திருமால்.
❖ அத்திருமால் ஒருகால் மாவலிச் சக்கரவர்த்தி வார்த்த நீர் தன் கையில் வந்து சேர்ந்தவுடன் விண்ணிலே உயர்ந்து வளர்ந்தார்.
❖ அத்தகைய திருமால் போன்று ஒலி முழங்கும் கடலின்கண் நீரினைக் குடித்து உலகை வலமாக எழுந்து மலைகள் முழுவதும் தங்கிப் பின்னர் உலகை வளைத்து எழுந்த கடிய செலவினையுடைய கரியமுகில் பெரும் மழையினைப் பெய்தது.

5) நல்லோர் விரிச்சி கேட்டு தலைவியை ஆற்றுவித்த செய்தியை விளக்குக.

❖ குளிர்ந்த கடல்நீரை முகந்த மேகம் மலைகளில் தங்கி, புல்லிய மாலைக் காலத்தில் பெருமழையைப் பொழிந்தது.
❖ துன்பத்தைச் செய்யும் அத்தகையதொரு மாலைப் பொழுதில் வயது முதிர்ந்த பெண்கள் தெய்வத்தை வழிபட எழுந்தனர்.

தெய்வத்தை வழிபடல்:

❖ காவலை உடையதும் பழமையானதுமான ஊரின் புறத்தே பெருமுது பெண்டிர் சென்றனர்.

- வண்டுகள் ஆரவாரிக்கும் அரும்புகள் விரிந்த முல்லை மலர்களை நாழியில் நிறைத்த நெல்லோடு தூவி, தெய்வத்தை வழிபட்டு நற்சொல் கேட்டு நின்றனர்.

<u>விரிச்சி கேட்ட பெண்கள் தலைவியைத் தேற்றுதல்:</u>

- விரிச்சி கேட்ட பெண்கள் தலைவியிடம் வந்து, தலைவியே சிறிய கயிற்றால் கட்டப்பட்ட இளங்கன்றுகள், பாலுண்ணாமையால் ஏற்பட்ட பசியால் வருந்துவதைக் கண்ட ஆயர் குலப் பெண் ஒருத்தி,
- குளிரால் நடுங்கும் தன் தோள்களை அணைத்துத் தடுத்தவளாய் , அக்கன்றுகளை நோக்கி, கோவலர் பின்நின்று செலுத்த, மேய்ச்சலை முடித்துக் கொண்டு இப்போதே நின் தாய்மார் வந்துவிடுவர்.
- ஆகவே வருந்த வேண்டாம் என்று கூறிய நல்ல சொற்களை நாங்கள் கேட்டோம். போரின் பொருட்டுப் பிரிந்து சென்ற உன் தலைவன், பகைவரை வென்று, அவரிடமிருந்து பெற்ற திறைப்பொருள்களுடன் விரைந்து வருதல் உறுதி.
- ஆதலால் மாமை நிறம் கொண்டவளே! நீ உன் பிரிவுத்துயரால் உண்டான வருத்தத்தைப் போக்கி ஆற்றியிருப்பாயாக! எனப் பலமுறை ஆறுதல் மொழி சொல்லித் தேற்றினர்.

6) <u>பாசறைக் கண்ணிருந்த வேந்தன் மனநிலையினையும், இல்லில் பிரிவால் ஆற்றாது தவித்த தலைவியின் துயரினையும் புலப்படுத்துக.</u>

யவனரால் செய்யப்பெற்ற எழினி தொங்கும் பள்ளியறையில் மிலேச்சர் உடனிருக்க அரசன் உறைந்தனன்.

<u>மன்னனின் மனநிலை:</u>

- பகைவன் மேல் விரும்பிச் செய்யும் மிக்க போரினால் கண் உறக்கம் பெறாமல், முன்பு போர் செய்த நாட்களில் பகைவர் விடுத்த வேற்படை நுழைந்தமையால் புண்பட்ட பெண் யானைகளை மறந்த களிற்று யானைகளையும்,
- யானைகளின் பெரிய கை, அடிபட்ட பாம்பு துடிப்பது போல் துடித்து அறுந்து வீழத் தாம் அணிந்த வஞ்சி மாலைக்கு நல்ல வெற்றியை உண்டாக்கிச் செஞ்சோற்று கடன் கழித்து அழிந்து போன் மறவரை நினைத்தும்,
- உடலில் காவலாய் இட்ட தோற்பரிசினையும் அறுத்துக் கொண்டு கரிய நுனியையுடைய அம்புகள் வந்து பாய்ந்ததால் வருத்தமுற்று நிற்கும் குதிரைகளை நினைத்தும்,
- ஒரு கையைப் படுக்கையின் மேலே வைத்துப் பிறிதொரு கையை முடியோடு கங்கணமும் சேரும்படி வைத்து அவ் இரவு முழுவதும் விழித்திருந்து நீளச் சிந்தித்தும் பின்வரும் நாளில் ஏற்படும் போரில் பகைவர்களை வெல்வது குறித்துச் சிந்தித்தும் தான் சூடிய வஞ்சிமாலைக்கும் வெற்றியை நிலைபெறச் செய்தும் பகை மன்னர் நடுங்கும்படியான வெற்றி முழங்கும் பாசறைக்கண் இனிதே துயின்றவன் மன்னன்.

<u>தலைவியின் நிலைமை:</u>

- பிரிவுக்கு ஆற்றாமல் துயருற்றுக் கிடக்கின்றாள் தலைவி. பொன்னாலாகிய ஏழடுக்கு மாடமும் உயர்ந்த ஆடை அணிமணிகள்,
- ஏவலர் மற்றையச் செல்வம் ஆகிய இவையெல்லாம் இருந்தும் அவளுக்கு இன்பம் கிடைக்கவில்லை.
- அணிமணிகள் நெகிழவும் உடல் நிறம் மாறவும் ஆகிய மயக்கம் பொருந்திய நிலை தலைவன் பிரிவினால் ஏற்பட்டன.

❖ இந்நிலையினை மாற்றிக் கொள்ளவும் தன் துன்பத்தைச் சற்று ஆற்றிக் கொள்ளவும் தன் நெஞ்சத்தை வேறொன்றின்மேல் திருப்பிக் கொள்ள மாளிகையின் முடங்குதோறும் கொட்டும் அருவியின் இன்னோசையில் செவி சாய்கின்றாள்.
❖ இருப்பினும் தலைவனைப் பற்றிய நினைவுகளே அவளைப் பற்றித் தாக்குவதால் அம்புபட்ட மயில்போல் நடுங்குகின்றாள் என்கிறார் ஆசிரியர்.

7) <u>பாசறைப் படைவீடுகளின் அமைப்பினை முல்லைப்பாட்டு வழிநின்று விளக்குக.</u>
❖ முல்லைப்பாட்டு அக இலக்கியமாயினும் தலைவியின் பிரிவுத்துயருக்குக் காரணமான தலைவனின் போர் நிகழ்ச்சிகளையும் எடுத்துரைக்கிறது.
❖ பகைநாட்டைக் கைப்பற்றக் கருதிய தலைவன் படையெடுத்துச் சென்று அங்கே தன் வீரர்களோடு பாசறை அமைத்துத் தங்கி போரில் ஈடுபடுகிறான்.

<u>பாசறை அமைவிடம்:</u>
❖ காட்டாறு சூழ்ந்த அகன்ற நெடிய காட்டிடத்து நீண்ட தூரம் வரை மணம்வீசும் பிடவம் செடிகளோடு பசிய சிறிய புதர்களையும் வெட்டியழித்து,
❖ வேடருடைய அரண்களையும் அழித்து, முள்வேலியிட்டு அமைத்த மதிலின் உள்ளே, கடல் போன்று அகன்ற பரப்புடையதாக பாசறை அமைக்கப்பட்டிருந்தது.

<u>வீரர்களின் பாசறை:</u>
❖ ஆடையைக் காவிநிறம் தோய்த்து உடுத்திய தவத்தைக் கொண்டவனும் முக்கோல் உடையவனும் ஆகிய அந்தணன், அம் முக்கோலை நட்டு,
❖ அவ்வுடையினை அதன்மேல் இட்டுவைத்த தன்மையைப் போல, தாம் செய்யும் போரில் புறமுதுகிட்டு ஓடாமைக்குக் காரணமான வலிய வில்லை ஒருசேர ஊன்றி, அவற்றின்மேல் அம்புகள் வைக்கப்பட்டக் கூடுகளாகிய தூணிகளைத் தொங்கவிட்டுள்ளனர் வீரர்கள்;
❖ கூடாரமாகக் கால்களை நட்டு, அவற்றைக் கயிற்றால் இழுத்துக் கட்டினர். அவ்வாறு அமைந்த இருப்பிடத்தில், பூ வேலைப்பாடு மிக்க வேல்களை நட்டனர்.
❖ பின்னர் கிடுகு எனப்படும் கேடயங்களை வரிசையாகப் பிணித்து வைத்தனர். இவ்வாறு விற்களால் சூழப்பட்ட அரண்களைக் கொண்டதாக பல்வேறு படைவீரர்கள் தங்கும் பாசறை அமைந்திருந்தது.

<u>அசனின் பாசறை:</u>
❖ பல்வேறு படை வீரர்களின் இருக்கைக்கு நடுவே. வேறு ஒரு தனியிடத்தில், நெடிய குத்துக்கால்களுடன் சேர்த்துச் செய்த பல வண்ணத் திரைச்சீலைகளை வளைத்துக் கட்டி, அரசனுக்கு என்று தனியாக ஓர் உள்வீட்டை வீரர்கள் அமைத்துக் கொடுத்தனர்.
❖ இவ்வாறு பாசறையின் அமைவிடமும் வீரர்கள், அரசன் ஆகியோருக்கான பாச்றைகளும் முல்லைப்பாட்டில் அழகுற எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

8) <u>முல்லைப்பாட்டு கூறும் பாசறை நிகழ்ச்சிகளை விளக்குக.</u>
❖ முல்லைப்பாட்டு ஓர் இரவில் நடைபெறும் பாசறை நிகழ்ச்சிகளைக் கண்முன்னே ஓவியமாகப் படைத்துக் காட்டுகிறது.

<u>யானைப் பாகரது செயல்:</u>
❖ பாசறையின்கண், தழை வேய்ந்த கூரை ஒழுங்குபட்ட தெருவின்கண், நாற்சந்தி முற்றத்தில் காவலாக நின்ற, மதநீர் பாயும் கன்னங்களையும் சிறிய கண்களையுடைய

யானைகள் கரும்பு, நெற்கதிர்கள், அதிமதுரத்தழை ஆகியவற்றை உண்ணாமல், அவற்றால் தம் நெற்றியைத் துடைத்து,

- தம் தந்தங்களின்மீது துதிக்கையை இட்டு நிற்க, பிளந்த முள்ளை உடைய பரிக்கோலால், கல்லாத இளைஞர்களாகிய பாகர்கள், யானைகளைப் பயிற்றுவிப்பதற்குரிய வடமொழிகளைப் பலகாலும் சொல்லி, உணவை உண்ணும்படிக் குத்தினர்.

<u>மங்கையர் விளக்குகளை ஏந்தல்:</u>

- அரசனின் பாசறையின்கண் வளையணிந்த முன்கையினையும், கூந்தல் அசையும் முதுகினையும், வலிய பிடியினை உடைய கத்தியைச் சேர்த்துக் கட்டிய கச்சினையும் உடைய பெண்கள்,
- பாவை விளக்கில் நீண்ட திரிகளை இட்டு, நெய் வார்க்கும் குழாயால் நெய்வார்த்து விளக்கேற்றினர்.

<u>மெய்க்காப்பாளர் காவல்:</u>

- நீண்ட நாவினை உடைய மணி ஒலி குறைந்து அடங்கிய நள்ளிரவில், மோசி மல்லிகைச் செடிகள் காற்றில் அசைந்தாடுவதைப் போன்று,
- தலைப்பாகை கட்டி, சட்டை அணிந்தவரும், வயது முதிர்ந்தோருமாகிய மெய்க்காப்பாளர் ஆடி அசைந்து மன்னனைச் சூழ்ந்து காவலாக நின்றனர்.

<u>நாழிகைக்கணக்கர் பொழுது அறிவித்தல்:</u>

- பொழுது அளந்து அறிவித்தலைப் பொய்க்காமல் செய்யவல்ல நாழிகைக் கணக்கர்கள், அரசனை வணங்கி, “கடல்சூழ்ந்த இவ்வையகத்தே பகைவரை வெல்லச் செல்கின்ற அரசனே! உம்முடைய நாழிகை வட்டிலில் சென்ற நாழிகை இவ்வளவு! காண்பாயாக!” என்று அறிவித்தனர்.

<u>மிலேச்சர்கள்:</u>

- அரசனின் பள்ளியறையை, வாய்பேச முடியாத, சட்டையணிந்த ஊமை மிலேச்சர்கள் காவலாகச் சூழ்ந்து நின்றனர்.

<u>வேந்தன் மனநிலை:</u>

- இத்தகைய பாசறையில் இரவு முழுவதும் உறக்கம் கொள்ளாமல் விழித்திருக்கின்றான் மன்னன். பகைவரின் வேல்பட்டு புண்பட்ட யானைகளையும் செஞ்சோற்றுக் கடன்தீர்க்க போர்க்களத்தில் இறந்துபட்ட வீரர்களையும்,
- பகைவரின் கூரிய அம்புகள் பாய்ந்ததால் செவி சாய்த்துப் புல் உண்ண இயலாமல் வருந்தும் குதிரைகளையும் நினைத்து வருந்தி உறக்கமின்றி இருக்கின்றான் மன்னன்.
- இவ்வாறு முல்லைப்பாட்டு பாசறை, நிகழ்ச்சிகளை எடுத்துரைக்கிறது.

9) <u>பாசறையில் இருந்த மன்னனின் மனநிலையை விவரி.</u>

- யவனர்களால் அமைக்கப்பட்ட பாசறையின்கண் மிலேச்சர்கள் காவல்புரிய, மன்னன் தன் பள்ளியறையில் உறக்கமின்றி விழித்திருக்கிறான்.
- மன்னன் ஒரு கையைப் படுக்கை மேலே வைத்து, கடகம் அணிந்த மற்றொரு கையால் தலையைத் தாங்கியவனாய்ப் போரினைச் செய்யும் மிக்க விருப்பத்தால்,
- உறக்கம் கொள்ளாமல் இரவு முழுவதும் போர்க்களக் காட்சிகளை நினைத்தவனாய்ப் படுத்திருக்கிறான்.

- போரில் பகைவர் எறிந்த வேல் பட்டமையால் புண் மிகுந்து, தம் பெண் யானைகளையும் மறந்து நின்ற களிறுகளைப் பற்றி நினைத்தவண்ணம் இருக்கின்றான்.
- அடிபட்ட பாம்பு துடித்தாற்போன்று துடிக்கும்படி, பகைவர்களது களிறுகளின் பெரிய துதிக்கையினை வெட்டி வீழ்தித் தாம் அணிந்த தேன் துளிக்கும் வஞ்சி மாலைக்கு வெற்றியைத் தேடித் தந்து, செஞ்சோற்றுக் கடன் கழித்துப் போரில் வீழ்ந்துபட்ட வீரரை நினைக்கின்றான்.
- குதிரைகளின் காதோரம் பாதுகாப்புக்காக அணிவிக்கப்பட்ட தோற்பரிசையை அறுத்துக் கொண்டு பாய்ந்த, பகைவரின் கூர்மையான அம்பு நுனிகள் அழுத்துவதால்,
- தம் செவியைச் சாய்த்துப் புல் உண்ண இயலாமல் வருந்தும் தம் குதிரைகளை நினைக்கின்றான்.
- இவ்வாறு பலவற்றையும் நினைத்து வருந்துவதால் உறக்கம் கொள்ளாமல் தவிக்கின்றான் மன்னன்.
- இவ்வாறு முல்லைப்பாட்டு, பாசறையில் இருக்கும் மன்னனின் மனநிலையைத் தெளிவாகப் படம்பிடித்துக் காட்டுகிறது எனலாம்.

10) <u>தலைவி ஆற்றியிருந்தமையையும் தலைவன் தேரின் வருகையையும் முல்லைப்பாட்டு எங்ஙனம் எடுத்துரைக்கிறது?</u>

- முல்லைப்பாட்டு தலைவியின் துயரத்தையும் வினை முடிக்கும் தலைவனின் போர்த்திறத்தையும் அழகுறக் கூறும் நூலாகும்.
- கார்காலம் வந்தும் தலைவன் வாராமையால் தலைவி துயரோடு பிரிவை ஆற்றியிருக்கிறாள்.

<u>தலைவி தன் துயரை ஆற்றியிருத்தல்:</u>

- தலைவனின் வருகையைக் காணாத தலைவி பாவை விளக்குகள் ஒளிவீசும் உயர்ந்த ஏழடுக்கு மாளிகையின்கண், தனிமையில் துன்பமுற்று வருந்துகிறாள்.
- தலைவன் "ஆற்றியிருப்பாயாக!" என்று சொல்லிய சொல்லை மீறுவது கற்பிற்கு இழுக்காகும் என்று நெடிது நினைந்து ஒருவாறு மனம் தேறியவளாய், கழன்று ஓடும் வளையல்களைத் திருத்தி ஆற்றியிருக்க உறுதி கொள்கின்றாள்.
- எனினும் பிரிவாற்றாமை வருத்த மீண்டும் மயங்குகிறாள்; பெருமூச்சு விடுகின்றாள்; அணிகலன்கள் நெகிழ; அம்பு தைத்த மயில்போல் நடுங்கி நிற்கின்றாள்.
- மழை பெய்வதால் அம் மாளிகையினுள் மழைநீர் கூடி விழும் கூடல் வாயிலில் விழுகின்ற அருவி போன்ற மழைநீரின் ஓசையையும் பல்வேறு இனிய ஓசைகளையும் கேட்டவாறு நெஞ்சம் ஆற்றி நின்ற தலைவியின் காதுகள் நிறையும்படியாகத் தலைவன் வரும் தேரின் ஆரவார ஓசை எழுந்தது.

<u>அரசன் வெற்றியுடன் வருதல்:</u>

- பகைவரை வென்று, அவர்தம் நிலங்களைக் கவர்ந்த பெரிய படையோடு வெற்றிக்கொடி உயர்த்தி, ஊதுகொம்பும், சங்கும் வெற்றிச் செய்தியை ஆரவாரக்கத் திரும்புகிறான் தலைவன்.

<u>அரசனது தேரின் வருகை:</u>

- காயா மலர்களும், கொன்றை மலர்களும் வெண்காந்தளும், தோன்றி மலர்களும் பூத்திருக்கின்ற, மான்கள் துள்ளி விளையாடுகின்ற, மழையினால் செழிப்புற்று விளங்கும்

முல்லை நிலத்துப் பெருவழியில், தலைவியைக் காணும் வேட்கையோடு தலைவன் விரைந்து வருகிறான்.

- முதிர்ந்த காய்களை உடைய வள்ளியங்காடு பின்னிட்டுப் போகும்படி, இயல்பாகவே விரைந்து செல்லும் குதிரையை மேலும் தூண்டி, விரைந்து வருகையில், தலைவனின் நெடிய தேரில் பூட்டிய குதிரைகள், அரண்மனையில் இனிய ஓசைகளைக் கேட்டவாறு ஆற்றியிருக்கும் தலைவியின் செவிகள் குளிரும்படியாக ஆரவாரித்தன.

11) <u>**பாசறைக்கண் மகளிர் மெய்காப்பாளர், நாழிகைக் கணக்கர், ஊமை மிலேச்சர் ஆகியோரின் திறமும் தொழிலும் எவ்வாறு எடுத்தியம்பப் பெறுகின்றன?**</u>

<u>**மெய்க்காப்பாளர்:**</u>

- நீண்ட நாக்கினையுடைய ஒளி பொருந்திய மணியின் ஒலியெல்லாம் அடங்கிய நள்ளிரவில், அசைகின்ற கொடியினையுடைய புனலி பூத்து விளங்கிற்று,
- நீர்த்து வலையோடு வருகின்ற காற்றிற்கு அப்புனலியின் சிறு தூறுகள் அசைவதைப் போன்று மயிர்க்கட்டுக் கட்டி சடையணிந்த துயிலால் ஏற்படும் மயக்கத்தையும் நல்லொழுக்கத்தையும் உடைய அரசனின் மெய்காப்பாளர் காவலாகச் சூழ்ந்து நிற்பர்.

<u>**நாழிகைக் கணக்கர்:**</u>

- நாளின் நாழிகையை அளந்து இவ்வளவுதான் என்று அறியக்கூடிய பொய்த்தல் இல்லாத நாழிகைக் கணக்கர், மன்னனைத் தொழுது கொண்டே காணுகின்ற கையினை உடையவராய் அவனை வாழ்த்தினர்.
- அவ்வாறு வாழ்த்திக் கொண்டே கடல் சூழ்ந்த உலகத்தில் உனக்குப் பகைவராய் உள்ளவரை வெல்லுவதற்கும் செல்லுகின்றவனே உன்னுடைய நாழிகை வட்டிலில் காணப்படும் நாழிகை இவ்வளவு என்று சொல்கின்றனர்.

<u>**ஊமை மிலேச்சர்கள்:**</u>

- புரவியை அடிக்கின்ற சம்மட்டி வளைந்து கிடக்கின்ற மடங்கிப் புடைத்து விளங்குமாறு நெருக்கி இறுக்கிக் கட்டிய உடையினையும்,
- சட்டையணிந்து அச்சம் தோன்றுதற்கும் காரணமான தோற்றத்தினையும், வலிமையான யாக்கையினையும் தறுகண்மையையும் உடையவர் சோனகர்.
- இத்தகைய சோனகரால் செய்யப் பெற்ற புலிச்சங்கிலி தொங்கவிடப்பட்ட மாட்சிமைப்பட்ட நல்ல இல்லில்,
- மாணிக்க விளக்கை எரிய வைத்துத் திண்மையான கயிற்றால் திரையை வளைத்துக் கட்டிய இரண்டு அறைகளுக்குள் அமைந்திருக்கும் பள்ளியறையுள் கையாலும் முகத்தாலும் உரைப்பதன்றி நாவினால் பேசாத சட்டையணிந்த ஊமை மிலேச்சர்கள் அரசனுக்குக் காவலாய் அருகிலிருந்தனர்.

12) <u>**முல்லைப்பாட்டின் சிறப்புகளை விவரிக்க.**</u>

<u>**முன்னுரை:**</u>

- செவ்விலக்கியத் தரம் வாய்ந்த பத்துப்பாட்டு இலக்கியங்களுள் ஐந்தாவதாக எண்ணப்படும் சிறப்பு வாய்ந்தது முல்லைப்பாட்டாகும்.
- இம்முல்லைப்பாட்டு அளவில் சிறியதாயினும் பேரளவிலான சிறப்புகளைத் தனக்குள்ளே கொண்டு திகழ்கிறது. அச்சிறப்புகளை இங்கு காணலாம்.

**நூல் அறிமுகம்:**

- பத்துப்பாட்டுள் மிகச்சிறிய இலக்கியம் என்னும் சிறப்பைப் பெற்ற நூல் முல்லைப்பாட்டாகும். இது அக இலக்கியமாகும். இதன் அடிவரையறை 103. இது ஆசிரியப்பாவால் ஆனது.
- காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வணிகன் மகன் நம்பூதனார் இதனை இயற்றியுள்ளார். இந்நூல் பாட்டுடைத் தலைவனாகிய அரசனின் பெயர் குறிப்பிடாமல் 'சுட்டி ஒருவர் பெயர் கொளப் பெறாஅர்' என்னும் அகமரபிற்கேற்ப அமைந்துள்ளது.
- தலைவி தன் நெஞ்சை ஆற்றுப்படுத்துவதாக அமைவதால் இது 'நெஞ்சாற்றுப்படை' எனவும் அழைக்கப்பெறும்.

**முல்லைப்பாட்டின் திணைகள்:**

- முல்லைப்பாட்டு முல்லைத்திணையைத் கொண்டது. முல்லைத்திணையின் பொழுதுகள் கார்காலம் என்னும் பெரும்பொழுதும், மாலை என்னும் சிறுபொழுதும் ஆகும்.
- முதல் கரு, உரிப்பொருள் என்னும் முப்பொருளும் சிறந்திருக்கும் நூல் இது எனலாம்.
- முல்லைப்பாட்டு அகநூலாயினும், இதன் கண் தலைவியின் பிரிவுத்துயருக்குக் காரணமான தலைவனின் போர்ப்பாசறை புறப்பொருள் செய்தியாக அமைந்துள்ளதைக் காணலாம். முல்லை என்னும் அகத்திணைக்கு எதிரான புறத்திணை வஞ்சி ஆகும். 'வஞ்சிதானே முல்லையது புறனே' என்கிறது தொல்காப்பியம்.
- எனவே இந்நூலில் முல்லைத்திணை, தலைவியை முன்னிறுத்தியும், வஞ்சித்திணை, தலைவனை முன்னிறுத்தியும் விவரிக்கப்படுகின்றன. வஞ்சித்திணைக்குரிய 'வேனிற் பாசறை' முல்லைப்பாட்டில் கூறப்படுகிறது.

**முல்லை சான்ற கற்பு:**

- முல்லை என்பது இருத்தல் - ஆற்றியிருத்தல் என்னும் கற்பொழுக்கத்தைக் கொண்டது. கற்பின் வழுவாது சிறப்புடன் இருத்தலே இருத்தலும் இருத்தல் நிமித்தமுமாகும்.

**கருப்பொருள் சிறப்பு:**

- முல்லை நிலத்திற்குரிய நிலமும் பொழுதும், மாலைப்பொழுது ஆகிய முதற்பொருளை ஒட்டி கருப்பொருள்கள் அமைகின்றன.
- முல்லைப்பாட்டு, முல்லைத் திணைக்குரிய நிலமாகிய காடு பற்றிய வருணனையைக் கூறுமிடத்தில் காயாமலர்கள்.
- கொன்றை, காந்தள். தோன்றி முதலிய பூக்களையும் 'திரி மருப்பு இரலை' 'மடமான்' என விலங்குகளையும் 'கானம் நந்திய செந்நிலப் பெருவழி' என முல்லைநிலத்துக் காடு பற்றியும் எடுத்துரைப்பதைக் காணலாம்.
- மேலும் முல்லை நிலத்து மக்களாகிய ஆயர்குலத்தார் பற்றிய 'ஆய்மகள்' 'கொடுங்கோல் கோவலர்' என்ற சொற்றொடர்களும் கருப்பொருள் செய்தியை உணர்த்துகின்றன.
- ஆயர்குலப் பெண்ணின் மொழியே நல்ல சொல்லாக, விரிச்சியாக ஏற்கப்படுகிறது.

**முல்லைப்பாட்டின் அமைப்பும் சிறப்பும்:**

- முல்லைப்பாட்டு கார்காலத்து மாலைப்பொழுதின் வருணனையுடன் தொடங்குகிறது. முல்லைப்பாட்டின் முதல் 23 அடிகள் கார்காலத்தின் மாலைப் பொழுதையும், தலைவியின் பிரிவாற்றாமையையும் பாடுகின்றன.
- அடுத்துள்ள 57 அடிகள் பாசறை அமைப்பு, தலைவனின் நிலை ஆகியவற்றை எடுத்துரைக்கின்றன. அடுத்து வரும் 9 அடிகள் தலைவியின் துயரத்தையும் இறுதி 14 அடிகள் மழைக்காலச் சிறப்பையும் தலைவன் திரும்பி வருவதையும் பாடுகின்றன.

- முல்லைப்பாட்டின் காட்சியமைப்பு அற்புதமானது. தலைவியின் துயரம், தலைவனின் நிலை, மீண்டும் தலைவியின் துயரம் என மாற்றி மாற்றிக் காட்டி, இறுதியில் அவற்றைக் கலைநுட்பத்துடன் இணைக்கும் திறன் முல்லைப்பாட்டின் சிறப்பாகும்.

முடிவுரை:

- மரபினைப் பேணுதல், விழுமிய வாழ்வியல் செய்திகள், விவரிப்புத்திறன், கருத்தாழமும் கற்பனை நயமும் மிக்க எளிய இனிய சொல்லாட்சி, அகமாந்தர் உணர்வுகள் போன்ற இயல்புகளால் முல்லைப்பாட்டு செவ்விலக்கியத்தரம் மிகுந்து விளங்குகிறது எனில் மிகையில்லை.